உங்கள் பிரதிகளுக்கு முந்துங்கள்!

# மங்கை

ஜூன் '98

## சிறுகதைச் சிறப்பிதழ்

யாழ்வாணன்,
செ. யோகநாதன்,
பிரபஞ்சன்,
பாலரஞ்சனி சர்மா,
லட்சுமி
ராஜரத்னம்,
சசிபாரதி,
அன்பு நெஞ்சன்,
நா. நாகராஜன்,
நீலாயதாட்சி
மற்றும்
பல முன்னணி
எழுத்தாளர்களின்
படைப்புகள்.

**விலை
ரூ. 10/-**



விந்தைகளும் வினோதங்களும் வேடிக்கைகளும்
விளையாட்டுக்களும் வயறு குலுங்க வைக்கும் சிரிப்புக்களும்
உங்களுக்கு வழங்க காத்துள்ளனர்.

சாகசம் புரியும்
டோனால்டு டக

Rs. 10/-

புகழ் பெற்ற டிஸ்னி கதாநாயகர்கள் டோனால்டு டக், மிக்கி, கூஃபி, ஹ்யூயி

ஆகியோரின் சாகசங்களை ஒரே புத்தகத்தில் கண்டு களிக்க மே 25 முதல்
வெளிவருகிறது டோனால்டு டக் தமிழ் காமிக்ஸ்.

முந்துங்கள் உங்கள்
முதல் காப்பிக்கு..!




© Disney




# அம்புலிமாமா

நிறுவனர்: **'சக்கரபாணி'** நிர்வாக ஆசிரியர்: **நாகிரெட்டி**

## தாஜ்மஹலை விற்க முயன்றனர்!

இதை நம்ப மறுக்கிறீர்களா? மாட்டீர்களென்றும்பினாலும் இதுதான் உண்மை. உலகின் அதிசயங்களில் ஒன்றான தாஜ் மஹலை உலகம் முழுவதும் பார்த்து வியக்கிறது. பாதுகாக்க யுனெஸ்கோ அமைப்பும் முயல்கிறது.

ஆனால் நூறு வருடங்களுக்கு முன் கிழக்கிந்தியக் கம்பெனியின் செலவு கட்டுக்கடங்காமல் போயிற்று. 1857 சிப்பாய்க் கலகத்தை அடக்க நிறைய செலவாகி விட்டது. இதற்காகத் தாஜ்மஹலில் பதிக்கப்பட்ட விலையுயர்ந்த ரத்தினங்களையும் சலவைக் கற்களையும் அக்கம்பெனி விற்று விட எண்ணியது. இந்த அபூர்வ யோசனையைக் கூறியவர் சாதாரணப்பட்ட மனிதரல்ல, கிழக்கிந்தியக் கம்பெனியின் பொருட்டு இந்தியாவை ஆண்ட கவர்னர் ஜெனரல்தான்.

நல்ல வேளையாக ஆட்சியில் இருந்த சிலர் அவ்வாறு செய்யக்கூடாது என அறிவுறுத்தவே அந்த யோசனை கைவிடப்பட்டது. ஆனால் ஆங்கிலேயர் மனதில் இப்படி ஒரு எண்ணம் தோன்றியது கிழக்கிந்தியக் கம்பெனி இந்தியாவின் கலைப் பொருள்களை எவ்வளவு துச்சமாக மதித்தது என்பது நன்கு புலப்படுகிறது.

**மதிமுகம்: 102** **மே 1998** **புன்னகை: 3**

**தனிப்பிரதி: ரூ.6.00** **வருட சந்தா: ரூ.72.00**





## எம் வாசகர்களின்
## கவனத்திற்கு

எமக்குக் கப்பலில் வரவேண்டிய பத்திரிகைக் காகிதம் வந்து சேர்வதில் தாமதமும் வழியில் இடைஞ்சல்களும் ஏற்பட்டு ஏப்ரல் மாத மத்தி வரையில் வந்து சேராததால் நாம் நம் ஏப்ரல் 1998 இதழைத் தவிர்த்து விட்டு அதன் இடத்தில் மே 1998 இதழை வெளியிட வேண்டிய கட்டாய நிலையில் உள்ளோம். இந்த தவிர்க்க முடியாத எம் முடிவை நீங்கள் பொறுமை வகித்து ஏற்பீர்களென நம்புகிறோம்.

—வெளியிடுவோர்

# பூகர் வெகுமதி பெற்ற இந்தியப் பெண் எழுத்தாளர்

அருந்ததிராய் எழுதிய 'தி காட் ஆஃப் ஸ்மால் திங்க்ஸ்' என்ற நாவலுக்கு பூகர் வெகுமதி கிடைத்துள்ளது. இங்கிலாந்தும் அயர்லாந்தும் உட்பட காமென் வெல்த் நாடுகளிலிருந்து 1997ல் வெளியிடப்பட்ட 106 நாவல்களிலிருந்து 'தி காட் ஆஃப் ஸ்மால் திங்க்ஸ்' என்ற நாவல் மிகச் சிறந்ததாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது. இது அருந்ததி ராய் எழுதிய முதலாவது நாவல்.

அருந்ததிராய் முப்பத்தேழு ஆண்டுகளுக்கு முன் கேரள மாநிலத்தில் கோட்டயம் மாவட்டத்து அயாமனம் கிராமத்து புனியம் பன்னில் குடும்பத்தில் பிறந்தவர். இவரது தாத்தா ஜான்குரியன் அரசாங்கப் பொறியாளராக இருந்து ஓய்வு பெற்ற பின் கிருஸ்துவ மதம் பிரசாரகரானார். அப்பகுதியில் ரெவரெண்ட் ஃபாதர் குரியன் என இவர் பெயர் பெற்றார். அப்போதைய பிரிட்டிஷ் அரசாங்கம் இவருக்கு 'ராவ் பகதூர்' பட்டத்தையும் அளித்தது. அருந்ததி ராயின் தந்தை ஷில்லாங்கின் தேயிலை தோட்ட எஜமானர். அங்குதான் இவர் பிறந்தார். இவரது ஆரம்பக் கல்வி அயாமனத்தில்தான் துவங்கியது.



அருந்ததி இளம் வயதிலிருந்தே இயற்கை அழகை ரசிப்பவர். கேரளம் இயற்கை அழகு நிரம்பியது. எனவே இவர் மனம் அதில் ஈடுபட்டது. கட்டடக் கலையைப் பாடமாகக் கொண்டு இவர் உயர் கல்வி கற்ற போதிலும் அத்துறையில் இவர் விருப்பம் காட்டவில்லை. திரைப்படங்களுக்கு எழுதியும் நடித்தும் இருக்கிறார் இவர். பின்னர் திரைப்பட உலகிலிருந்து இலக்கியத் துறைக்கு வந்து தம் நாவலை ஐந்து ஆண்டுகளில் எழுதி முடித்தார்.

இவரது தாயார் இவர் சிறு வயதில் படிப்பில் காட்டிய ஆர்வத்தைக் கூறி அப்போதே இவருக்கு ஒரு டைப்ரைட்டர் வாங்கிக் கொடுத்ததைக் குறிப்பிட்டார். அருந்ததி 'டெஸ்க் டாப் கம்ப்யூட்டரை' வாங்கி அதைக் கொண்டு தம் நாவல் பிரதியைத் தயாரித்தார்.

இந்த நாவல் ஒரு இரட்டையரின் குடும்ப வாழ்க்கையைச் சித்தரிக்கிறது. கதை 1960ல் நடப்பதாகக் கூறுகிறது. அருந்ததிதான் வாழ்க்கையில் சந்தித்த பலரது குணசித்திரங்களை இதில் வெளிப்படுத்தியுள்ளார். நாவலை முடித்தபின் இவர் இதன் பிரதியை இங்கிலாந்திலுள்ள பிரசுர கர்த்தாக்களின் பிரதிநிதிகளிடம் காட்டினார். அதை வெளியிடப் பலர் போட்டி போட்டனர். முடிவில் மூன்று கோடி ரூபாய்களைக் கொடுத்து ஹார்ப்ர்ஸ் காலின்ஸ் இவரது நாவலை வாங்கிக் கொண்டு சென்ற ஏப்ரலில் பிரசுரித்தது. இது பூகர் வெகுமதியைப் பெறு முன் 35000 பிரதிகள் விற்றுப் போயிற்று. பதினேழு உலக மொழிகளில் இது மொழியாக்கம் செய்யப் பட்டுள்ளது. இன்னும் 20 மொழிகளிலும் இது வெளிவருமாம். பூகர் நிறுவனம் இந்நாவலுக்கு 12.5 லட்சம் ரூபாய்களை வெகுமதியாக அக்டோபர் 14ல் அறிவித்தது.

இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் இந்த வெகுமதித் திட்டம் அறிவிக்கப்பட்டு தொடர்ந்து வருகிறது. இது வெகுமதியைப் பெறும் நான்கா வது இந்தியர் அருந்ததி. 1907ல் சால்மன் ரஸ்டியும், 1975ல் ருத் பிரபோ ஜாப்வாலாவும், 1971ல் வி.எஸ்நைபாலும் மற்ற மூவராவர். இந்தியர்களான இம்மூவரும் இந்த வெகுமதியைப்பெறுமுன்பே பெயர் பெற்ற எழுத்தாளர்களாக இருந்தவர்கள். ஆனால் அருந்ததி ராய்தனது முதலாவது நாவலுக்கு இந்த வெகுமதியைப் பெற்றது பாராட்டத்தக்கதாகும்.

இவருக்குக் கிடைத்த வெகுமதியைப் பற்றி இவரது கருத்தைக் கேட்ட போது இவர் ''இது மிகச் சிறந்த நாவல் எனக் கூற முடியாது. போட்டிக்கு வந்தவற்றில் சிறந்ததாகி அதிர்ஷ்டம் தந்த பரிசு'' என்றார்.



# மாறு மனமே மாறு!

சுந்தரம் தானென்ற அகம்பாவம் பிடித்தவன். தான் நினைப்பதே சரியென எண்ணிச் செயல்படுபவன். பெரியோர்கள் அறிவுரைகள் கூறினாலும் அவன் ஏற்பவனல்ல. அவனது இந்தப் போக்கு அவனது தந்தை சபாபதிக்கு மிகுந்த வேதனையை அளித்தது.

சபாபதி நல்லவன். அறிவாளி. ஆயினும் அவனும் தான் என்ற அகம்பாவம் கொண்டவனே. எனவே ஊரார் அப்பனைப் போலத்தான் பிள்ளை என்ற கூறலாயினர். சபாபதியும் ''நான் அகம்பாவம் கொண்டவன் என்றாலும் சம்பிரதாயங்களைக் கடைப்பிடிப்பவன். தந்தையை பக்தி சிரத்தையுடன் மதித்து வந்ததால்தான் இவ்வளவுக்கு உயர முடிந்தது. என்னைப் போல என் மகனும் இருக்க வேண்டுமென்றே நான் விரும்புகிறேன்'' என எல்லோரிடமும் கூறி வரலானான்.

சுந்தரம் ஒருவரது அனுபவம் கண்டு பாடம் கற்றுக் கொள்பவனல்ல. எதையும் தானே பரீட்சித்து சரி பார்க்க வேண்டுமெனப் பிடிவாதம்பிடிப்பவன். சிறு வயதில் நெருப்பு சுடுமென பலர் அவனை எச்சரித்தபோதிலும் அதனைத் தொட்டுப் பார்த்துக் கையை சுட்டுக் கொண்டான். இளைஞனான போது ஊரில் ஏரியில் முதலை உள்ளது எனப் பலர் எச்சரித்தும் அதைக் கேளாமல் அவன் ஏரியில் குதித்து முதலையின் பிடியிலிருந்து சிரமப்பட்டுத்தப்பி கரைக்கு வந்தவன்.

ஆனால் சுந்தரத்தின் அகம்பாவத்தால் ஓரிரு நன்மைகள் ஏற்பட்டன. அவ்வூரில் ஆண்டாளு என்ற பணக்கார விதவை ஒரு பெரிய வீட்டில் வசித்து வந்தாள். அவள் திடீரென இறந்து போகவே அவளது வாரிசுதாரரான உறவினர் அந்த வீட்டை விற்க முயன்றார். ஆனால் அந்த வீட்டில் ஆண்டாளின் ஆவி உலாவுவதாக ஒரு

—சிவனார் செல்வன்—

வதந்தி கிளம்பவே அதை மிகக் குறைந்த விலைக்குக் கொடுப்பதாக அந்த உறவினர்கூறினார். அப்போதும் அதை வாங்க யாரும் முன் வர வில்லை.

சுந்தரம் மலிவாக வரும் அந்த வீட்டை வாங்கலாமெனத் தன் தந்தை யிடம் கூறினான். ஆனால் சபாபதி அதற்கு இணங்கவில்லை. சுந்தரம் அந்த வீட்டில் ஆவி எதுவும் உலாவ வில்லை என்று தான் நிரூபிப்பதாகக் கூறி மூன்று இரவுகள் தனியாக அந்த வீட்டில் படுத்துத் தூங்கி விட்டு வந்தான். இதனால் சபாபதி திருப்தி அடைந்து அந்த வீட்டை விலைக்கு வாங்கி விட்டான்.

தன் மகனால் நன்மை ஏற்பட்ட தென்று சபாபதி மகிழ்ந்தாலும் சுந் தரம் தன் பேச்சைக் கேட்டு நடப்ப தில்லையே என்று மிகவும் வருத்தப் பட்டான். சபாபதிக்குப் பத்து ஏகர் நிலம் இருந்தது. அதில் நன்கு பாடு பட்டால் நிறையப் பணம் கிடைத்து மேலும் பத்து ஏகர் நிலத்தை வாங்கி விடலாமே என்று சபாபதி நினைத் தான்.

ஆனால் சுந்தரமோ விவசாயத்தில் மிகவும் பாடுபட வேண்டுமென்றும். வியாபாரத்தில் இறங்கினால் அதிகம் பாடுபடாமல் நிறையப் பணம் சம்பா திக்கலாமே என்றும் தன் தந்தையிடம் கூறினான். தந்தை கொஞ்சம் நிலத்தை விற்றுப் பணம் கொடுத்தால் அதை முதலாக வைத்துக் கொண்டு லட்சம் லட்சமாகச்சம்பாதித்து காட்டுவதாகக் கூறினான்.

சபாபதியோ ''வியாபாரம் நமக்கு சரிப்படாது. அதற்கு சாமர்த்தியம்



வேண்டும் பேச்சு, பொய், புரட்டு என் றெல்லாம் வேண்டும். இவை இருந் தாலே வியாபாரத்தில் முன்னேற முடி யும். விவசாயத்தில் நீ என் அனுபவங் களைத் தெரிந்து கொண்டு செயல்பட லாமே'' என்றான்.

அது கேட்டு சுந்தரம் சிரித்து ''நான் வியாபார நெளிவு சுளிவுகளைக் கற் றுக் கொள்கிறேன். வியாபாரம் செய்து முன்னுக்கு வந்து காட்டுகிறேன். எனக்கு விவசாயமும் வேண்டாம். அதில் உங்களது அனுபவங்களையும் கேட்டு நான் தெரிந்து கொள்ள மாட் டேன்'' என்று கூறினான்.

சுந்தரத்திற்குத் தாயின் பக்கபலம் இருந்தது. அவன் தன் தந்தை கூறியதை லட்சியம் செய்யவில்லை. இதனால் சபாபதியின் மனம் வேதனைப் பட்டது. அவன் தன் நிலத்தை விற்க



விரும்பவில்லை. மேலும் பத்து ஏகர் நிலம் வாங்க அவன் பணம் சேர்த்து வைத்திருந்தான். அதை சுந்தரத்திடம் கொடுத்து ''இதை என்ன வேண்டு மானாலும் செய்து கொள்'' என்று கூறினான்.

சுந்தரம் அதை முதலாக வைத்துக் கொண்டு வியாபாரம் செய்து கொஞ்ச நாட்களிலேயே முதலை மூன்று மடங் காக்கிக் காட்டினான். அதைக் கண்டு சபாபதி மகிழ்ந்து ''நீ சாமர்த்தியசா லியே. உன் திறமையைக் குறைவாக மதிப்பிட்டு விட்டேன். நீ விரும்பி னால் என் நிலத்தை விற்று அந்த முத லுடன் உன் வியாபாரத்தில் கூட்டு சேர் கிறேன்'' என்றான். ஆனால் சுந்தரம் அதற்கு சம்மதிக்காமல் ''பணம் என்ற தும் எல்லாம் காற்றில் பறந்து விடுமா? நீங்கள் தானே வியாபாரத்தில் பொய், புரட்டு, மோசடி என்றெல்லாம் இருக் கும், அதைச் செய்யக் கூடாது என்று எனக்கு அறிவுரை கூறினீர்கள். நான் அனுபவ ரீதியாக அவை வியாபாரத் தில் உள்ளன என்று தெரிந்து கொண் டேன். இம்முறை இவை இல்லாமல் நேர்மையாய் வியாபாரம் செய்யப் போகிறேன். அப்போதும் முன் போல லாபம் கிடைத்தால் தொடர்ந்து வியாபாரம் செய்வேன். அப்படிக் கிடைக்கா விட்டால் வியாபாரத்திற் குத் தலை முழுக்கு போட்டு விடு கிறேன். அதுவரை யாரையும் என் வியாபாரத்தில் கூட்டு சேர்த்துக் கொள்ள மாட்டேன்'' என்றான்.

தன் பால் கொஞ்சமும் பாசம் தன் மகனுக்கு இல்லையே என எண்ணி சபாபதி மனம் புழுங்கினான். ஒரு வருடம் கழிந்தது. சுந்தரம் தன் வியா பாரத்தில் பணத்தை எல்லாம் இழந்து விட்டான். அதனால் வியாபாரத்தை விட்டு விவசாயம் செய்யத் தீர்மானித் தான். அது கண்டு சபாபதி மகிழ்ந்து போனான். ஆனால் சுந்தரம் தன் தந்தை செய்யும் முறையில் விவசாயம் செய் யப் போவதில்லை எனக் கூறி நெல் விளையும் நிலத்தில் புகையிலை யைப் பயிர் செய்யப் போவதாகக் கூறினான். மாமரங்களை வெட்டி விட்டு. தென்னங் கன்றுகளை நடு வானாம்.

சபாபதியோ ''இப்போதுள்ள நம் நிலத்தில் இதெல்லாம் செய்யாதே. புதிதாக நிலம் வாங்கி நீ என்ன வேண்டுமானாலும் செய்'' என்றான். ஆனால் சுந்தரம் அதற்குச் சம்மதிக்க வில்லை. சபாபதி தன் மனைவியிடம் தன் மகன் செய்ய விரும்புவதைக் கூறி

''அவன் அப்படிச் செய்தால் நம் குடியே முழுகி விடும்'' என்று புலம்பினான்.

அவளோ கவலைப்படாமல் ''எல்லாம் நடக்கிறபடி நடக்கட்டும். நீங்கள் சுந்தரத்தின் மனம் நோகும் படி எதுவும் செய்யாதீர்கள்'' என்றாள். சபாபதிக்குத் தன் மனைவி கூறியது சற்றும் பிடிக்கவில்லை. அவன் தன் நிலத்தில் சுந்தரம் எதுவும் செய்யக் கூடாது எனக் கூறி விட்டான்.

அந்த ஊரில் பசுபதி என்ற பணக்கார விவசாயி இருந்தான். அவனுக்கு நூறு ஏகர் நிலம் இருந்தது. அவளது ஒரே மகள் உமையாள். சுந்தரத்தின் அழகைப் பார்த்து அவள் அவனைத் தான் கல்யாணம் செய்து கொள்ளப் போவதாகப் பிடிவாதம் பிடித்துக் கொண்டிருந்தாள். பசுபதியும் சுந்தரத்தை அழைத்து ''நீ என் மகளைக் கல்யாணம் செய்து கொள். உனக்கு பத்து ஏகர் நிலம் கொடுக்கிறேன். அதில் நீ உன் இஷ்டப்படி விவசாயம் செய்து கொள்ளலாம்'' என்று கூறினான்.

சுந்தரத்திற்கு இது பிடித்ததே. ஆனால் சபாபதியும் பசுபதியும் ஜென்ம விரோதிகளாயிற்றே. இருவருக்கும் பேச்சு வார்த்தை கூடக் கிடையாது. அதனால் பசுபதி ''நீ என் மகளை மணந்து கொண்டால் நீயும் அவளும் உன் பெற்றோர்களுடன் வாழக் கூடாது. தனிக் குடித்தனம் போக வேண்டும்'' என்ற நிபந்தனையைக் கூறினான்.

தன் தந்தை எப்போது வேறு நிலம் வாங்கி அதில் விவசாயம் செய்யச் சொன்னாரோ அப்போது பசுபதியின் மகளைப் பற்றி சுந்தரம் கூறி அவன் விதித்த நிபந்தனையையும் தன் பெற்றோர்களிடம் கூறினான்.

அதைக் கேட்டு சுந்தரத்தின் தாயார் திடுக்கிட்டாள். தன் மகன் தனியாகப் போய் விடுவானோ என அவள்





பயந்து தன் அண்ணன் கோவிந்தனைப் போய்ப் பார்த்தாள். கோவிந்தன் அவளது கூடப் பிறந்தவன் அல்ல. அவளது சிற்றப்பாவின் மகன். அவனிடம் ஒரு அபூர்வ சக்தி வாய்ந்த மூலிகை இருந்தது. அதைக் கொண்டு எவ்விதக் கல் மனதையும் அவனால் மாற்றி விட முடியுமென்று எல்லோரும் நம்பினார்கள். அவ்வாறு மனம் மாற ஒருவன் அவனிடம் தொடர்ந்து இரு நாட்கள் செல்ல வேண்டுமாம். இரண்டாவது நாளில்தான் மாற்றம் தெரியுமாம்.

கோவிந்தன் எல்லாவற்றையும் சுந்தரத்தின் தாயிடமிருந்து விவரமாகக் கேட்டுத் தெரிந்து கொண்டு "நீ உன் மகளுக்குக் கல்யாணம் செய்து வைத்து விட்டு அவளுக்கு என்ன அறிவுரை கூறினாய்? தனிக் குடித்தனம் போகும்படித்தானே? இப்போது உன் நிலை உன் மகளின் மாமியாரின் நிலைபோலாகி விட்டது. தன் வினை தன்னைச் சுடும் என்பது உன் விஷயத்தில் சரியாகி விட்டது. நீ உன் மகளைத் திருந்தி நேர் வழிப்படுத்து. அப்போதுதான் உன் குடும்பத்தில் அமைதி நிலவும்" என்றான்.

சுந்தரத்தின் தாயோ "இப்போது நான் என் மகள் விஷயம் பற்றிப் பேச வரவில்லை. சுந்தரத்திற்கு எங்கள் மீது கொஞ்சமும் பாசமில்லாது இருக்கிறதே. அவன் மனதை மாற்றும்படி கேட்டுக் கொள்ளவே உன்னிடம் வந்தேன்" என்றாள். கோவிந்தனும் "அது பற்றி கவனிக்கிறேன். ஆனால் உன் மகள் மனம் மாறினால்தான் சுந்தரத்தின் மனதையும் நான் மாற்ற முடியும் என்பதை நினைவில் வைத்துக் கொள்" என்று கூறி அவளை அனுப்பினான்.

சுந்தரத்தின் தாயார் கோவிந்தன் கூறியதைப் பெரிதாக எடுத்துக் கொள்ளாமல் தன் மகன் சுந்தரத்தை மட்டும் இரண்டு நாட்கள் கோவிந்தனிடம் அனுப்பி வைத்தால் அவன் மனம் மாறி விடும் என்று நினைத்தாள். அவள் தன் வீட்டை அடைந்து தன் கணவனிடம் "இனி நீங்கள் கவலைப் படாதீர்கள். கோவிந்த விடம் எல்லாம் விவரமாகச் சொல்லி விட்டேன். அவன் சுந்தரத்தின் மனதை மாற்றி விடுவான்" என்றாள்.

சபாபதியும் "இவ்வளவு நாட்களாக நீதான் சுந்தரத்திற்குப் பரிந்து பேசிக் கொண்டிருந்தாய். இப்போது அவன் உன் கையை விட்டு நழுவி விடுவானோ என்ற நிலை வந்ததும்

உன் மனமும் மாறி விட்டது பார்'' என்று கேலியாகக் கூறினான். அவளோ ''எதற்கும் வேளை என்பது வர வேண்டும். அது சுந்தரம் விஷயத்தில் இப்போது தான் வந்திருக்கிறது அவன் கோவிந்தனிடம் இரண்டு நாட்கள் சேர்த்தாற் போலப் பார்த்து விட்டு வந்தால் அவன் மனம் மாறி விடும். நாம் சொல்கிறபடியே நடப்பான். எல்லாம் விதிப்படிதானே நடக்கும்'' என்று வேதாந்தம் பேசினாள்.

அதன்பின் அவர்கள் சுந்தரத்தை அழைத்து ''மகனே! நீ இஷ்டப்பட்டதற்கு மாறாக ஒருப்போதும் நாங்கள் சொன்னதில்லை. உன்கல்யாண விஷயத்திலும் அப்படித்தான் நடப்போம். இன்று நீ உன் மாமன் கோவிந்தனின் வீட்டிற்குப் போய் அவரது ஆசிகளைப் பெற்றுக் கொண்டுவா. அதன் பின் உன்கல்யாணம் ஜாம்ஜாமென்று நடக்கும்'' என்று கூறினார்கள். சுந்தரமும் தன் பெற்றோர் கூறியபடி கோவிந்தனைப் போய்ப் பார்த்தான்.

கோவிந்தனும் அவனையே எல்லா விஷயங்களையும் சொல்லச் சொன்னான். சுந்தரம் தன் கல்யாணம் பற்றிக் கூறவே கோவிந்தனும் ''இதோ பார். உன் தாயார் தன் மகளைத் தனிக் குடித்தனம் போகும்படி அறிவுரை கூறியவள். அதனால் உன் மனைவியை நீ உன் தாயாருடன் வசிக்க வைத்தால் அவள் உன் மனைவியைக் கொடுமைப் படுத்துவாள். அதனால் நீ கல்யாணமான பின் தனிக் குடித்தனம் போவதுதான் நல்லது. உன் தந்தை எப்படிப்பட்டவனென்று ஊரே அறியும். அவன் உன் தாயார் கிழித்த கோட்டைத் தாண்ட மாட்டான். இப்



படிப் பட்டவர்களிடம் நீ இவ்வளவு நாட்கள் இருந்ததே அதிசயம்தான். உன் தாய் தந்தையர் வயது காலத்தில் உன் உதவி இல்லாமல் கஷ்டப்பட வேண்டுமென்று அவர்கள் தலையில் எழுதி இருக்கிறது'' என்றான்.

சுந்தரமோ ''மாமா! இந்தக் கதை எல்லாம் எனக்கு எதற்கு? உங்களது ஆசிகளைப் பெற்று வர என் பெற்றோர்கள் என்னை அனுப்பினார்கள். அதனால்தான் உங்களிடம் வந்தேன்'' என்றான். அப்போது கோவிந்தன் ''உன் அப்பனுக்கு எது நல்ல வேளை என்று கூட தெரியவில்லையே. பழுத்த ராகு காலத்தில் உன்னை அனுப்பி இருக்கிறானே. நாளைக் காலையில் வா. என் ஆசிகளை அளிக்கிறேன்'' என்றான்.

சுந்தரம் அங்கிருந்து தன் வீட்டை

அடைந்து "அவன் என் மாமனா? உங்கள் இருவரையும் கண்டபடி பேசுகிறானே. எனக்கே என்ன செய்ய வேண்டுமென்று தெரியும். தாய் தந்தையிடம் பாசம் கொள்ள வேண்டுமென பிறர் சொல்லித்தான் எனக்குத் தெரிய வேண்டுமா? இனி என் மாமன் வீட்டு வாசலைக் கூட மிதிக்க மாட்டேன். எப்படியெல்லாம் இழிவாக அவன் உங்களைப் பேசி விட்டான்!" என்று ஆத்திரம் பொங்கக் கூறினான்.

அது கேட்டு சுந்தரத்தின் தாயார் திடுக்கிட்டாள். சுந்தரம் தொடர்ந்து இரண்டு நாட்கள் தன் மாமன் வீட்டிற்குப் போய் வந்தால் அவனது மனம் மாறி தான் சொன்னபடியெல்லாம் கேட்பான் என எண்ணி இருந்தாள். ஆனால் அது இப்போது நடக்காது போலிருக்கிறது.

சபாபதியோ "ஆகா! சுந்தரத்திற்குத்தான் என் மீதும் தன் தாயின் மீதும் எவ்வளவு பாசம் உள்ளது! அவனது மாமன் எங்களைத் திட்டியதும் அவன் என்ன நினைத்தான்! இப்படித் தன் பெற்றோரைக் கண்டபடி திட்டும் தன் மாமன் வீட்டுப் பக்கம் கூட இனிப் போகக் கூடாது எனத் தீர்மானித்து விட்டானே. இவன் என் மீது மிகுந்த பாசம் கொண்டவனே. இதுவரை இவனைத் தவறுதலாக எடை போட்டு விட்டேன். இவன் என்னையும் தன் தாயையும் விட்டுப் போகவே மாட்டான். அவன் விருப்படியே கல்யாணத்தையும் செய்து வைக்கிறேன். பசுபதி என் விரோதிதான். ஆனாலும் என் மகனின் பிற்கால வாழ்க்கை நன்றாக இருக்க வேண்டும் என்பதற்காக நானே பசுபதியைக் கண்டு பேசி ஒரு நல்ல முடிவிற்கு வருகிறேன்" என நினைத்தான்.

அப்போது சபாபதிக்குத் தன் மகன் தன் மீது எவ்வளவு பாசம் கொண்டிருக்கிறான் என்பது புரிந்தது. அவன் தன் அகம்பாவத்தை விட்டு பசுபதியைக் கண்டு பேசி சுந்தரத்தின் கல்யாணத்தைச் செய்து வைத்தான். சுந்தரத்தின் தாயும் தன் மகளுக்கு நல்ல அறிவுரை கூறி அவளை மாமியார், மாமனாருடன் சேர்ந்து வாழும் படிச் செய்தாள். சுந்தரமும் தனிக் குடித்தனம் வைக்கவில்லை. பசுபதியும் தன் நிபந்தனையை வற்புறுத்தவில்லை. எல்லாவற்றிற்கும் காரணம் யாவரின் மனமாற்றமே.





# மாமன்னர் அசோகர்

## 14

(பிந்துசாரன் இறந்த பின் அசோகன் சுசிம்மனையும் அவனது சகோதரர்களையும் கொன்றான். முதியோர்களின் அறிவுரைப்படி அவன் இரண்டாவது விவாகம் செய்து கொண்டு மகதத்தின் அரியாசனத்தில் அமர்ந்தான். அமைச்சர்களும் சேனாதிபதியும் தூண்டிய தன் பேரில் அவன் கலிங்கத்தின் மீது படை எடுத்தான். அதற்கு முன் தன் முதல் மனைவி விதிஷா தேவியைப் பாடலிபுத்திரத்திற்கு வரவழைக்க அவன் முயன்றது நடக்க வில்லை. மகதப் படையின் தாக்குதலை எதிர்க்கக் கலிங்க மக்களும் சிற்றரசர்களும் தயாரானார்கள். அப்போது-)

மன்னன் அசோகனும் சேனாதிபதியுமிருந்த கூடாரத்திற்கு யசன் வந்தான். அவன் ''என்ன ஆச்சரியம்! நம் மின்னல் தாக்குதலை இந்தக் கலிங்கத்து மக்கள் இப்படிக் கடுமையாக எதிர்த்துக் கொண்டிருக்கிறார்களே'' என்றான். அசோகனும் ''ஆமாம்! அதிசயம்தான். கலிங்கத்திற்கு இப்போது மன்னன் என்று ஒருவன் இல்லை. ஆனால் சிற்றரசர்கள் ஒன்று சேர்ந்து ஒற்றுமையாய் நம் தாக்குதலை எதிர்க்கிறார்களே!'' என்றான்.

இதைக் கேட்டுக் கொண்டு சேனாதிபதி எதுவும் கூறாமல் இருந்தான். அப்போது யசன் ''இப்படிக் கூறி உங்களைக் குறை கூறுவதாக எண்ணிவிட வேண்டாம். கலிங்கத்து மக்களின் தைரியத்தையும் துணிச்சலையும் கண்டுதான் வியப்படைகிறோம்'' என்றான்.

சேனாதிபதியும் ''எனக்கும் ஆச்சரியமாகவே உள்ளது. இதுவரை



நம்மை எதிர்த்தவர்கள் கிராமங்களில் வசிக்கும் சாதாரண மக்களே. இவர்கள் கூட ஆபத்து சமயத்தில் உதவும் என எண்ணிப் போர்ப் பயிற்சி பெற்றிருக்கிறார்கள். இவர்கள் கலிங்கத்து இராணுவ பலத்தை எண்ணிப் பெருமைப்பட்டுக் கொள்கிறார்கள். இது இவர்களது தொன்று தொட்டு இருந்து வரும் பழக்கம்'' என்றான்.

அப்போது அசோகன் ''இவர்கள் தம் நாட்டைக் காக்கத் தம் உயிரையே துச்சமாக மதிப்பது தெரிகிறது'' எனவே சேனாதிபதியும் ''ஆம். இது உண்மைதான்'' எனக் கூறினான். அது கேட்டு அசோகன் ''நம் பலமான படையை எதிர்க்கக் கலிங்கத்து சாமானிய மக்கள் கூடத் தயாராக இருக்கிறார்கள். என் முதல் படை எடுப்பிலேயே நான் வெற்றியைக் காண முடியாதா? தோல்வியைத்தான் தழுவ வேண்டுமா? இதுதான் என் படை எடுப்பிற்குக் கிடைக்கப் போகும் பலனா?'' என்று வேதனையுடன் கூறினான்.

அது கேட்டு யசன் தன் வாளை உருவி எடுத்துக் கொண்டு ''அரசே! என் உடலில் உயிர் உள்ளவரை நீங்கள் தோல்வியடைய நான் விட்டு விட மாட்டேன்'' என்று ஆவேசத்துடன் கூறினான். பின்னர் சேனாதிபதியைப் பார்த்து ''இனி நாம் கலிங்கத்தவர்களைக் கண்ட மாத்திரத்தில் சற்றும் ஈவிரக்கமின்றி வெட்டிப் போட வேண்டும். அவர்கள் நம்மைத் தாக்க வரும் வரை காத்துக் கொண்டிருக்கக் கூடாது. எவ்வளவு பேர்களைக் கொல்ல முடியுமோ அவ்வளவு பேர்களைக் கொல்லுங்கள். இதனால் நம்மைத் தாக்குபவர்களின் எண்ணிக்கை கணிசமாகக் குறைந்து விடும்'' என்றான்.

அப்போது அவர்களிருந்த கூடாரத்தின் முன் தப்பட்டை ஒலி கேட்கவே, ஏதோ செய்தி வந்துள்ளது என யசன் தெரிந்து வெளியே சென்றான். சற்று நேரத்திற்குப் பின் ஒரு படைத் தலைவனை அழைத்துக் கொண்டு கூடாரத்திற்குள் சென்றான்.

''தோசாலிக் கோட்டையைச் சுற்றிப் போர் கடுமையாக நடந்து கொண்டிருக்கிறது. நம் வீரர்கள் ஐயாயிரமும் கலிங்கத்தவர் பத்தாயிரமும் இறந்து போனார்கள். ஆனால் இந்த கலிங்கத்தவர் முறையான இராணுவப் பயிற்சி பெற்றவர்களல்ல. பயிற்சி பெற்ற கலிங்கப் படை வீரர்கள் கோட்டைக்குள் இருக்கிறார்கள்'' என்று அப்

படைத் தலைவன் கூறினான். அசோகனும் ''பயிற்சி பெற்ற இராணுவம் நம்மைத் தாக்குமுன் நம் வீரர்களில் பலரைக் கொன்று நம் படை பலத்தைக் குறைக்கவே கலிங்கத்தவர் முயல்கிறார்கள் இனி தாமதிக்கக் கூடாது. நம் படைக்கு நானே தலைமை தாங்கித் தாக்குதலை நடத்துகிறேன்'' எனக் கூறி யசனுடனும் படைத் தலைவனுடனும் கூடாரத்திலிருந்து வெளியே வந்தான்.

போர்களத்திற்கு அருகிலுள்ள ஒரு கிராமத்தில் ஆயிரக்கணக்கான பெண்கள் ஒன்று கூடினார்கள். பகல் உணவைத் கலிங்க வீரர்களுக்கு கொடுத்தார்கள். காயமுற்ற வீரர்களுக்குச் சிகிச்சை அளித்தார்கள். இதை ஒற்றர்கள் வாயிலாக அறிந்த மகத சேனாதிபதி தன் படையுடன் அந்த கிராமத்திற்குப் போய் அதைத் தாக்கி அங்குள்ள வீடுகளுக்குத் தீ வைத்தான்.

இதனால் அங்கிருந்த கலிங்கத்துப் பெண்கள் பயந்து விடவில்லை. எரியும் வீடுகளிலிருந்து எரிந்து கொண்டிருக்கும் கொள்ளிக்கட்டைகளை எடுத்துக் கொண்டு கூச்சலிட்டவாறே மகதப் படையை அவர்கள் தாக்கினார்கள். ஆனாலும் சற்று நேரத்துள் அந்தப் பெண்களெல்லாம் மகதப் படை வீரர்களால் கொல்லப்பட்டார்கள்.

அன்று முழுவதும் கோட்டைக்கு வெளியேதான் கடும் போர் நிகழ்ந்தது. இரு தரப்பிலும் ஆயிரக்கணக்கில் வீரர்கள் கொல்லப்பட்டனர். மறுநாள் யசன் அசோகனிடம் ''ஒரு நல்ல செய்தி கிடைத்துள்ளது. கோட்டையின் ஒரு பக்கச் சுவர் இடிந்து விழுந்து விட்டது. நம் பலமான படை



ஒன்றைக் கோட்டைக்குள் அனுப்பி விட்டேன். அது அங்குள்ள சிற்றரசர்களைக் கொன்று விடும். கோட்டையும் நம் வசமாகி விடும். எனவே இந்தப் படையெடுப்பில் வெற்றி நமதே என்பது உறுதியாகி விட்டது'' என்றான்.

அசோகனும் யசனைப் பாராட்டி ''நண்பா! நற்செய்தியைத்தான் கொண்டு வந்திருக்கிறாய். நான் இந்தத் தேரசாலி கோட்டை மதில் சுவர் மீது நின்று இனி யசன்தான் இங்கு மகத சாம்ராஜ்யத்தின் பிரதிநிதி என்று இன்னும் சற்று நேரத்தில் மகிழ்ச்சியுடன் அறிவிக்கப் போகிறேன்'' என்று களிப்புடன் கூறினான். யசனும் மகிழ்ச்சியுடன் அதனைக் கேட்டுக் கொண்டான்.

யசனின் கட்டளைப்படி தான்



சேனாதிபதி கோட்டைக்குள் உள்ள கலிங்க சிற்றசர்களைப் பிடிக்க தோசாலிக் கோட்டைக்குள் சென்றான். அவர்கள் இருபத்தோரு பேர்கள். அவர்களில் பலர் முதியவர்கள். ஆயினும் அவர்கள் யாவரும் மகதப் படையை எதிர்த்துப் போராடி வீர மரணத்தை அடைந்தார்கள்.

இதன் பிறகு அசோகனும் யசனும் தோசாலிக் கோட்டைக்குள் சென்றார்கள். அசோகனைக் கண்டு படுகாயப்பட்டு ரத்த வெள்ளத்திலிருந்த ஒரு முதியவர் ''எங்களை நீங்கள் அடக்கி ஒடுக்கி விட்டது உண்மையே. ஆனால் எங்களது உணர்ச்சிகளையும் எண்ணங்களையும் அடக்கி விட முடியாது. உங்கள் படை வீரர்கள் ஆயுதங்களே இல்லாத பெண்களைக் கொன்றார்கள். உங்களிடம் நியாயம் பற்றிப் பேசினால் எடுபடாது'' என்றார்.

அசோகன் பின்புறம் திரும்பி ''இவர் கூறியது போல ஆயுதமே ஏந்தாத அபலைப் பெண்களைக் கொன்றது யார்?'' என்று கேட்டான். அதற்கு பதில் யாரும் கூறவில்லை. அந்த சமயத்தில் அந்த முதியவரின் உயிர் அவரது உடலை விட்டுப் பிரிந்தது. யசனோ ''எது என்னவானாலும் சரி, தோசாலிக் கோட்டை நம் கைக்குக் கிடைத்து விட்டது'' என்றான்.

அசோகனோ ''கோட்டை நமக்குக் கிடைத்து விட்டபோதிலும் அதில் ஒரு கலிங்கத்தவன் கூட இல்லையே'' என்றான். யசனோ ''அவர்களில் ஒருவன் கூட உயிரோடு இங்கே இருந்திருந்தால் நாம் இங்கே நின்று இப்படிப் பேசிக் கொண்டிருக்க முடியுமா? இங்கிருந்த கலிங்க வீரர்கள் யாவரும் கொல்லப்பட்டு விட்டார்கள்'' என்றான். அது கேட்டு அசோகன் ''அப்படியானால் நாம் ஒரு கலிங்கத்தவன் கூட இல்லாத கோட்டையைத்தான் பிடித்திருக்கிறோம் என்கிறாயா?'' என்று கேட்டான்.

யசனும் ''கலிங்கவாசிகள் இங்கு இல்லாது போனாலும் அவர்கள் சம்பாதித்துச் சேகரித்துள்ள செல்வம் ஏராளமாக உள்ளது. கலிங்கத்து வியாபாரிகள் அயல் நாடுகளிலிருந்து கொண்டு வந்த பணம் அது. இனி அவர்கள் அயல் நாடுகளுடன் வியாபாரம் செய்வது ஏது?'' என்றான். அசோகனும் ''அவர்களது வியாபாரம் நடக்காது போய் விடுவதால் நமக்கு என்ன பயன்? அவர்கள் நம் மக்களாக இருந்து அயல் நாடுகளுடன் வியாபாரம் செய்தால் தானே நமக்கு

நன்மை?'' என்று கேட்டான்.

அப்போது ஒரு குரல் ''அது உண் மையே. ஆனால் அவர்கள் அடிமை கள் போல இராமல் சுதந்திரமாகச் செயல்படும்படி இருக்க வேண் டுமே!'' என்றது.

அதைக் கேட்ட அசோகன் அவ் வாறு கூறியது யாரெனச் சுற்றிலும் பார்த்தான். அப்போது உயிர்போகும் நிலையிலிருந்த ஒரு சிற்றரசன்தான் அவ்வாறு கூறியது என்பது அவனுக் குத் தெரிந்தது. அப்போது அசோக னின் பின்னால் இருந்த படைத் தலை வன் ''நீ இன்னமுமா உயிரோடு இருக் கிறாய்?'' என்று கூறித் தன் வாளால் அவனைக் குத்தினான். அவ்வளவு தான்! அந்தச் சிற்றரசன் ஒரேயடியாகக் கண்ணை மூடி விட்டான்.

அசோகனோ ''நீ அவசரப்பட்டு அவனைக் கொன்று விட்டாயே'' எனக்கடிந்து கொண்டான். அப்போது சேனாதிபதி ''அரசே! நீங்கள் இங்கு இருக்கும் போது சற்றும் கவனப் பிச காக இருக்கக் கூடாது, அந்தச் சிற்றர சன் அப்படி வீராவேசமாகப் பேசினா னென்றால் அவன் தன்னிடம் ஆயு தத்தை மறைத்தே வைத்திருக்கிறான் என சந்தேகிக்க வேண்டும். அவன் அதைக் கொண்டு தங்களைத் தாக்கி விடக்கூடாது என எண்ணியே படைத் தலைவன் அவனைக் குத்திக் கொன் றான். அப்படிச் செய்தது சரியே'' என் றான்.

அப்போது யசன் ''ஆன போதி லும் மன்னர் முன் அவரது அனுமதி யின்றி எதையும் செய்யக் கூடாது என்று இந்தப் படைத் தலைவனுக்கு ஏன் தெரியவில்லை?'' என்று கேட்



டான். படைத் தலைவனும் ''அரசே! தங்களைக் காக்கவே நான் இவ்வாறு செய்தேன். தவறுதலுக்கு என்னை மன்னியுங்கள்'' என்று கூறினான்.

அசோகன் யசனிடம் ''இம்மாதிரிச் செயல்களே நமக்குக் கெட்ட பெயரை உண்டாக்கி விடுகின்றன'' எனச்சற்று மனத் தாங்கலுடன் கூறினான். அதன் பின் அவன் சேனாதிபதியிடம் ''ஆயுதங்களே இல்லாத அபலைப் பெண்களை நம் படை கொன்றது உண்மையா?'' என்று கேட்டான். சேனாதிபதி பதில் எதுவும் கூறாமல் தலையைத் தாழ்த்திக் கொண்டான்.

அசோகனும் ''ஏன் பதில் கூற வில்லை?'' எனக் கேட்கவே சேனாதி பதியும்'' அவர்களிடம் ஆயுதங்கள் இல்லை என்றாலும் அவர்கள் கலிங் கத்துப் படை வீரர்களுக்கு உணவு



கொடுத்து உதவிக் கொண்டிருந்தார் கள். இவ்வாறு உதவுபவர்களை அழிக்கா விட்டால் நாம் வெற்றி பெற முடியாதே'' என்றான். ''அவர் கள் எந்த ஊரில் வசிப்பவர்கள்?'' என்று அசோகன் கேட்கவே சேனாதி பதியும் ''அவர்கள் பல ஊர்களி லிருந்து வந்து ஓரிடத்தில் கூடியவர் கள்'' என்றான்.

அப்போது அசோகன் ''சரி. நாம் இப்போது அந்த இடத்திற்குப் போக லாம்'' எனவே சேனாதிபதி அவனை அங்கு அழைத்துச் சென்றான். யசனும் கூடவே சென்றான். கோட்டைக்கு வெளியே நின்ற ஒரு படைத் தலை வன் மன்னன் வருவதைக் கண்டு அவனை வணங்கி ''அரசே! லட்சத்திற் கும் மேலாகக் கலிங்க மக்கள் போரில் கொல்லப்பட்டார்கள். அதை விட அதிக எண்ணிக்கையில் கலிங்கத்தவர் களைச் சிறைப்படுத்தி இருக்கிறோம்'' என்று கூறினான். அசோகன் அதைக் கேட்டு எதுவும் கூறாமல் குதிரை மீது ஏறி அமர்ந்தான். யசனும் சேனாதிபதி யும் குதிரைகளின் மீதமர்ந்து அவ னோடு சென்றார்கள்.

அவர்கள் சற்று தூரத்திலுள்ள ஒரு கிராமத்தை அடைந்தார்கள். அங்கு நரிகளும் கழுகுகளும் கீழே விழுந்து கிடந்த மனித உடல்களைக் குத்திக் குதறிக் கொண்டிருந்தன. அங்கு நில விய மயான அமைதியைக் கண்ட அசோகனின் மனவேதனை அதி கரித்தது.

அப்போது அசோகன் ''யசா! நாம் கலிங்கத்தை வென்று விட்டோம். இனி நீதான் இதன்...'' என்று கூறிக் கொண்டிருக்கையில் ஒரு பெண் பல மாகச் சிரிப்பது அவர்கள் காதில் விழுந்தது. மறுநிமிடம் ஒரு அம்பு விர்ரெனப் பாய்ந்து வந்து யசனின் மார்பில் குத்தி அவனைக் குதிரை மீதிருந்து கீழே விழ வைத்தது.

சேனாதிபதியும் அசோகனும். உடனே தம் குதிரைகளின் மீதிருந்து கீழே குதித்தார்கள். அம்பு எய்த வனைப் பிடித்து இழுத்து வருமாறு சேனாதிபதி தன் வீரர்களுக்குக் கட்டளை இட்டான். அப்போது ''என்னைப் பிடிக்க எங்கும் தேடித் திரிய வேண்டாம். இதோ இங்குதான் நான் இருக்கிறேன்'' என்று கூறிக் கொண்டு அழகிய பெண் ஒருத்தி கையில் வில்லும் அம்புடனும் வந் தாள். படைத் தலைவன் அவளைப் பிடித்துக் கொண்டான்.

அசோகன் கீழே விழுந்து கிடந்த

யசனருகே சென்றான். யசன் ஏதோ சொல்ல முயன்றான். ஆனால் அவனால் பேச முடியவில்லை. அது கண்டு அசோகன் திகைத்துப் போனான். பின்னர் அவன் பிடிபட்ட பெண்ணைப் பார்த்து ''இப்படி ஒரு பயங்கரச் செயலை ஏன் செய்தாய்?'' என்று கேட்டான்.

அவளோ ''கலிங்கத்தை யாராலும் வெல்ல முடியாது என்று நிரூபித்துக் காட்டி விட்டேன். எங்களை ஆள நீங்கள் யாரையும் நியமிக்க முடியாது. யாராவது ஆள வந்தால் அவர்களுக்கு இந்த கதிதான் நேரும்'' என்றாள். படைத் தலைவன் ''மன்னரை அவமதிக்கும் இவளைக் கொல்ல எனக்கு அனுமதி அளியுங்கள்'' என்றான்.

அப்போது யசன் மெல்லிய குரலில் ''வேண்டாம். இவள் மன்னர் மீது குறி வைக்காதது நம் அதிர்ஷ்டமே. நம் படையெடுப்பு வெற்றிகரமாக முடிந்ததே என எண்ணி மகிழ்வோம்'' எனக் கூறியவாறே உயிர் விட்டான்.

அசோகன் மனதில் ஒரு பெரும் புயலே எழும்பியது. கலிங்கத்து மக்களுக்குத் தம் நாட்டின் மீது எவ்வளவு பற்று உள்ளது எனக் கண்டு வியப்படைந்தான். தோசாலிக் கோட்டையை மக்களே இல்லாத நிலையில்தான் கைப்பற்றியதை அவன் தன் வெற்றியாகவே நினைக்கவில்லை. இந்தப் போரில் கலிங்கம் மயானம் போல காட்சியளிக்கிறதே. மகத வீரர்களும் சரி, கலிங்க வீரர்களும் சரி. லட்சக் கணக்கில் கொல்லப்பட்டிருக்கிறார்களே. லட்சக் கணக்கில் வீரர்கள் காய முற்றும் சிறைப்படுத்தப்பட்டிருக்கிறார்களே. இது என்ன கோரம்! அபலைப் பெண்கள் தாக்கப்பட்டு கொடுமைப் படுத்தப்பட்டார்கள். வீடுகள் தீக்கிரையாக்கப்பட்டன. என்ன அநியாயம்! யசன் கூட தன்னைக் கொன்றவனை விட்டு விடும்படிக் கூறினானே! அவன் மனம் கூட இளகி விட்டது.

தன் நண்பனின் உடலை அசோகன் தகனம் செய்தான். அந்தப் பெண் மட்டும் அம்பை அசோகன் மீது எய்திருந்தால் அசோகன் தோல்வியுற்றான் என்ற பெயர்தானே கிடைத்திருக்கும்! அது சரி இந்த கலிங்கத்துப் போரால் என்ன பயன் கிட்டியது என்று அசோகன் யோசிக்கலானான்.

(முடிவு அடுத்த இதழில்)





# சரியான தீர்ப்பு

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதைச் சுமந்து கொண்டு அவன் மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இந்த பயங்கர நள்ளிரவில் நீ இப்படி ஏன் சிரமப்படுகிறாய்? உன் முன் ஏதாவது சிக்கலான வழக்கு வந்து குற்றவாளிக்கு என்ன தண்டனை கொடுப்பது என்று யோசிக்கிறாயா? சில சமயங்களில் அரசர்கள் வழக்குகளில் அளிக்கும் தீர்ப்பு சரியானதாக இல்லாதும் போய் விடும். இதற்கு எடுத்துக்காட்டாக ஒரு கொள்ளைக்காரனின் கதையைக் கூறகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதையைச் சொல்ல ஆரம்பித்தது.

வெகு காலத்திற்கு முன் மணிப்புரம் என்ற நாட்டை மாணிக்கசேனன்

## வேதாளம் சொல்லும் கதை



என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவன் தைரியமும் துணிச்சலும் மிக்க வன். நல்ல அறிவாளி. நியாயம் வழங்குவதில் நிகரற்றவன் என்ற பெயரைப் பெற்றவன். அவனது காலத்தில் அளிக்கும் தண்டனைகள் மிகவும் கொடூரமானவை. பிடிபட்ட திருடனின் கைகள் வெட்டப்படும். கொள்ளைக்காரர்கள் தூக்கிலிடப்பட் டார்கள். இப்படி இருந்தும் நாட்டில் திருட்டுகளும் கொள்ளைகளும் நடந்து கொண்டுதான் இருந்தன.

மணிப்புர நாட்டை அடுத்து மர கதபுரம் என்ற நாடு இருந்தது. இந்த இரு நாடுகளின் எல்லைப் பகுதியில் அடர்ந்த காடு ஒன்று இருந்தது. அதி லுள்ள கொள்ளைக்காரர்களால் மக் கள் பலவித கஷ்டங்களை அனுப வித்து வந்தார்கள். மணிப்புர வீரர்கள் அக்கொள்ளைக்காரர்களைப் பிடிக் கப் பல முறைகளில் முயன்றும் தோல்வியைத்தான் கண்டார்கள். அதற்குக் காரணம் அக்கொள்ளைக் காரர்களுக்கு அக்காட்டில் பல ரகசிய மறைவிடங்கள் இருந்தன.

அந்தக் காட்டில் காலநாகன் என்ற கொள்ளைக்காரத் தலைவன் இருந் தான். அவன் இளைஞன். வழிப்பறி கள் செய்வதில் கை தேர்ந்தவன். ஒரு முறை அவனது ஆட்கள் அரசாங்க ஒற்றன் எனச் சந்தேகித்து ஒரு முனி வரைப் பிடித்து வந்து அவன் முன் நிறுத்தினார்கள். அவர் உண்மை யிலேயே முனிவர்தான் என அறிந்த பின் காலநாகன் அவரைக் காட்டிற்கு வெளியே கொண்டு போய் விட்டு விட்டு வரும்படித் தன் ஆட்களுக்குக் கட்டளை இட்டான்.

முனிவர் அங்கிருந்து செல்லாமல் காலநாகனிடம் ''அப்பனே! நான் வேண்டுமென்றேதான் இந்தக் காட் டிற்குள் வந்தேன். நான் ஒரு யோக சாதனையில் இருக்கிறேன். அதற்குத் தனிமையும் சத்தமில்லாத இடமும் தேவை. என்னுடன் யாரும் பேசக் கூடாது. இதுவரை இங்கிருந்த என்னை வழியில் போகிறவர்கள் என்னை வணங்கி ஏதோ கேள்விகள் கேட்டு என் நிஷ்டையைக் கலைத்துக் கொண்டே இருக்கிறார்கள். உன் ரகசிய இடங்களில் ஏதாவது ஒன்றில் என்னை இருக்கச் செய்து என் யோக நிஷ்டை தடை இல்லாமல் நடக்க உதவுவாயா?'' என்று கேட்டார்.

காலநாகனும் அவர் கேட்டுக் கொண்டபடி ஒரு ரகசிய இடத்தில் இருக்கச்செய்து அவரது தேவைகளை



எல்லாம் அவனே பூர்த்தி செய்து வந்தான். முனிவரின் யோக நிஷ்டை எவ்விதத் தடங்கலும் இல்லாது நடைபெறலாயிற்று.

ஒருநாள் முனிவர் காலநாகனிடம் ''கோடை காலம் வந்து விட்டது. இனி நான் இமயமலைக்குச் செல்ல வேண்டும். இதுவரை நீ எனக்குப் பணிவிடை புரிந்ததற்காக மகிழ்கிறேன். ஆனால் நீ இந்த மகா பாதகத் தொழிலைச் செய்வதுதான் எனக்கு மிகுந்த வருத்தத்தை அளிக்கிறது. நீ பிழைக்க எவ்வளவோ தொழில்கள் உள்ளன. நீ இப்படிக் கொள்ளை அடிப்பதை விட்டு விடு'' என்றார்.

அதற்குக் காலநாகன் ''ஐயா! எனக்கு இந்தத் தொழில் ஒன்றுதான் தெரியும். இது பாதகச் செயலா அல்லது இல்லையா என்றெல்லாம் எனக்குத் தெரியாது. என் முன்னோர்கள் செய்து வந்த தொழிலும் இதுவே. எனக்கு வாள் பிடிக்கத் தெரிந்திருந்தால் மன்னனின் படையில் போர் வீரனாகச் சேர்ந்திருப்பேன்'' என்றான்.

முனிவர் காலநாகனின் மனதை மாற்ற எவ்வளவோ முயன்றும் பயனளிக்காமல் போகவே முடிவில் அவர் ''அப்பனே! எனக்குத் தோன்றியதைக் கூறினேன். அதை நீ ஏற்பதும் ஏற்காததும் உன் இஷ்டம். நீ எனக்குப் பணிவிடைகள் புரிந்தாய். அதற்காக உனக்கு உதவ நான் விரும்புகிறேன். உனக்கு ஒரு மந்திரத்தை உபதேசிக்கிறேன். அதை நீ உச்சரித்ததும் ஒரு குழந்தையாக மாறி விடுவாய். அதனால் நீ உன் வாழ்க்கையை ஆரம்பத்திலிருந்து புதிதாகத் தொடங்க முடியும். ஆனால் நீ மறுபடியும் காலநாகனாக மட்டும் ஆக முடியாது. இதை நினைவில் வைத்துக் கொண்டு தேவைப்படும் போது உச்சரி'' எனக் கூறி மந்திரத்தை உபதேசித்து விட்டுச் சென்றார்.

இப்படி இருக்கையில் மரகதபுரத்திற்கு பண உதவி தேவைப்பட்டதால் மணிப்புர மன்னன் அப்பணத்தை காவல் வீரர்களின் பாதுகாப்பில் மரகதபுரத்திற்கு அனுப்பினான். ஆனால் அந்தப் பணம் மரகதபுரத்தைச் சென்றடையவில்லை. அதற்குக் காவலாகச் சென்ற வீரர்களின் கதி என்ன ஆயிற்று என்றும் தெரியவில்லை. இது காட்டிலுள்ள ஒரு கொள்ளைக்காரனின் வேலையாகத்தான் இருக்குமென மாணிக்கசேனன் எண்ணினான். அதனால் படை வீரர்களுக்குத் தானே தலைமை தாங்கி



காட்டில் கொள்ளைக்காரர்களின் இடங்களைத் தாக்கலானான்.

அந்த வேட்டையில் காலநாகன் அவனிடம் அகப்பட்டுக் கொண்டான். அவனிடம் காவல் வீரர்கள் பற்றியும் அவர்கள் எடுத்துச் சென்ற பணம் பற்றியும் மன்னன் கேட்ட போது அவன் அது பற்றித் தனக்கு எதுவுமே தெரியாது என்று கூறினான். ஆனால்தான் ஒரு கொள்ளைக்காரன் தான் என்று மட்டும் அவன் ஒப்புக் கொண்டான்.

காலநாகன் தான் ஒரு கொள்ளைக் காரன் என்று ஒப்புக் கொண்டதால் அவனுக்கு தூக்கு தண்டனை விதித்தான். அத்தண்டனை ஒரு வார காலத்துள் நிறைவேற்றப்படும் என அறிவிக்கப்பட்டது. அதனால் ஒரு வாரகாலத்திற்கு காலநாகன் ஒரு சிறைச்சாலையில் அடைக்கப்பட்டான். சிறையில் அடைபட்ட காலநாகன் தன் நிலையைப் பற்றி எண்ணி வருந்திக் கொண்டிருந்த போது அவனுக்கு முனிவர் உபதேசித்த மந்திரம் நினைவிற்கு வந்தது.

தூக்கு தண்டனை நிறைவேற்றப் படும் நாள் வந்தது. அன்று காலநாகனைக் கொலைக் களத்திற்கு அழைத்து போககாவலாளிகள்சிறைச் சாலைக்கு வந்த போது அங்கு காலநாகனுக்கு பதிலாக ஒரு குழந்தை இருப்பதைக் கண்டு திகைத்துப் போனார்கள். 'குவா, குவா'வென்று கத்தும் அக் குழந்தையைத் தூக்கிப் பார்த்த போது காலநாகனின் முகத்தில் இருந்தது போன்ற மச்சம் அதன் முகத்திலும் இருப்பது கண்டு அவர்கள் ஆச்சரியப்பட்டார்கள். பச்சிளம் குழந்தையைக் கொல்வதா என எண்ணி அக்குழந் தையை எடுத்துக் கொண்டு போய் மன்னனிடம் காட்டி காலநாகன் குழந்தையாக மாறி விட்டான் என்று கூறினார்கள். மன்னனும் அரச சபையில் கூடி இருந்தவர்களிடம் அந்த நிலையில்தான் என்ன செய்ய வேண்டுமென்று கேட்டான்.

அப்போது வர்த்தகர்களின் தலைவனான இந்திர குப்தன் எழுந்து ''அரசே! குழந்தையாக மாறியவன் காலநாகன்தான் என்பதில் சந்தேகமே இல்லை அவனது உடலின் அங்க அடையாளங்கள் இக்குழந்தையின் உடலிலும் உள்ளன. காலநாகன் ஏதோ மந்திரம் கற்றிருக்கிறான். அதனால் குழந்தையாக மாறி உங்கள் தண்டனையிலிருந்து தப்பப் பார்க்கிறான். அதனால் காலநாகனுக்கு அளித்த

தண்டனையை இக்குழந்தைக்குக் கொடுத்து விட வேண்டும்'' என்றான்.

மாணிக்கசேனன் சற்று நேரம் யோசித்து விட்டு ''காலநாகனுக்குக் கொடுத்த தண்டனையை இதற்குக் கொடுக்கக்கூடாது. இதை என் அந்தப் புரத்திற்கு அனுப்பி வளர்த்து வரப் போகிறேன்'' என்றான்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே! மாணிக்கசேனனின் தீர்ப்பு பற்றி எனக்குப் பல சந்தேகங் கள் தோன்றுகின்றன. சிறு குழந்தை யாக மாறியவன் காலநாகன்தான் என்று எல்லோரும் உறுதி படக் கூறி விட்டார்கள். குழந்தையாக மாறி விட்டதால் காலநாகன் தண்டனை யிலிருந்து தப்புவது முறையா? தண் டனை அளிக்காமல் அக்குழந்தையை அந்தப்புரத்திற்கு அனுப்பி வளர்க்கப் போவதாக மன்னன் அறிவித்ததும் முறையா? ஒரு கொள்ளைக்காரனுக்கு ராஜ மரியாதை அளிப்பது எந்த வகை யில் நியாயமானது? குழந்தையைக் கண்டு மன்னனின் மனம் இளகி விட் டதா? இந்தக் கேள்விகளுக்கெல்லாம் பதில் தெரிந்திருந்தும் நீ கூறா விட டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்'' என்றது

விக்கிரமனும் ''மாணிக்கசேனன் சரியான தீர்ப்பையே அளித்தான். குழந்தை வடிவில் இருந்த காலநாகன் குற்றமற்றவன். மன்னனின் பணத் தைத்தான் கொள்ளை அடிக்கவில்லை என்று காலநாகன் கூறினான். அவனு டைய மறை விடத்திலிருந்தும் எந்தப் பணமும் கிடைக்கவில்லை. எனவே காலநாகன் அப்பணத்தைக் கொள்ளை அடிக்கவில்லை என்று மன்னன் தெரிந்து கொண்டான். எனவே அக் குற்றத்திற்காக காலநாகனை தண்டிக்க முடியாது. கொள்ளைக்கார கால நாகன் குழந்தையாகியது அவன் புதிய பிறப்பை அடைந்து விட்டான். முனி வர் அவனுக்கு மந்திரத்தை உபதே சித்ததன் முக்கிய நோக்கமே அவன் புதிய பிறப்பை எடுக்க வேண்டும் என் பதுதான். இக்காரணங்களால் மன்னன் அளித்த தீர்ப்பு முற்றிலும் சரியே'' என்றான்.

விக்கிரமனும் சரியான இந்த பதி லால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.





# தந்தையின் தவறு

பனையூரில் பரமசிவமும் அவனது மகனும் தமக்குள்ள ஐந்து ஏகர் நிலத்தில் விவசாயம் செய்து வந்தனர். ஒருமுறை அவர்களது நிலத்தில் உளுந்து ஏராளமாக விளைந்தது. பரமசிவமும் அவன் மகன் முருகனும் அந்த உளுந்தை மூட்டைகளாகக் கட்டி போரடிக்கும் இடத்தில் அடுக்கி வைத்தார்கள். நல்ல விலை கிடைக்கும் போது அதை விற்று விடலாம் என்று எண்ணி அதைக் காவல் காக்க ஒருவனையும் நியமித்தான்.

ஒருவாரம் கழித்து பரமசிவம் நான் வைத்த உளுந்து மூட்டைகளை எண்ணிப் பார்த்த போது இரண்டு மூட்டைகள் குறைவதைக் கண்டான். அது பற்றி அவன் காவல் காப்பவனிடம் கேட்கவே அவன் தனக்கு எதுவும் தெரியாதென்றும் தான் இரவு முழுவதும் விழித்திருந்ததாகவும் கூறினான். பரமசிவம் அவனை வேலையிலிருந்து நீக்கி விட்டு தன் மகன் முருகனைக்காவலுக்கு வைத்தான். மறுநாள் பரமசிவம் வந்து, பார்த்த போது மேலும் ஒரு மூட்டை குறைந்திருப்பதைக் கண்டான்.

ஊருக்குள் விசாரித்ததில் தன் மகன் முருகன்தான் ஒரு மளிகைக் கடைக்கு உளுந்து மூட்டையை விற்பது பரமசிவத்திற்குத் தெரிந்தது. இதை அவனால் நம்ப முடியவில்லை. இதை எப்படிக் கண்டு பிடிப்பது என யோசித்துக் கொண்டிருக்கையில் தன் உறவினர் அடுத்த ஊரிலிருந்து அனுப்பிய வேலையாள் வேலப்பன் கிடைத்தான்.

பரமசிவம் அவனிடம் ''உன் எஜமானர் கேட்டதைக் கொடுத்தனுப்ப இரண்டு மூன்று நாட்களாகலாம். எனவே இங்கே மூன்று நாட்கள் இரு. இரவு வேளைகளில் என் வயலில் உளுந்து மூட்டைகளுக்குக் காவலாகவும் இரு'' என்றான். வேலப்பனும் அதற்குச் சம்மதித்து இரவில் வயலில்

—எஸ். சோபினி—

காவலுக்குச் சென்றான்.

மறுநாள் பரமசிவன் வயலுக்குப் போய்ப் பார்த்த போது இன்னொரு மூட்டை குறைந்திருந்தது. அதைக் கண்ட அவன் வேலப்பனிடம் ''என்ன காவல் காக்கிறாய் நீ? ஒரு மூட்டை உளுந்து திருடு போயிருக்கிறது! அதை ஒருவனால் தூக்கிச் செல்ல முடியாது. அதனால் நீதான் திருடி இருக்கிறாய் என்றே நினைக்கிறேன்'' என்றான். வேலப்பனும் ''நான் நேற்றிரவு களைப்பால் அயர்ந்து தூங்கி விட்டேன். அதோ உங்கள் மகன் முருகனிடம் கேட்டால் ஒருவேளை திருடன் யாரென்று தெரியலாம்'' எனக் கூறிச் சற்று தூரத்திலுள்ள முருகனைக் காட்டினான்.




பரமசிவமும் கோபத்தோடு ''முருகா! உளுந்து மூட்டையைத் தூக்கிச் சென்றவன் யாரென உனக்குத் தெரியும் என்று இந்த வேலப்பன் கூறுகிறானே. சொல், யார் அந்தத் திருடன்?'' என்று கேட்டான். முருகனும் தலை குனிந்தவாறே ''திருடன் வேறு யாருமில்லை நான்தான். மூட்டையை இரவில் தூக்கிப் போய் மளிகைக் கடையில் நான்தான் விற்றேன்'' என்றான்.

அதைக் கேட்ட பரமசிவம் ஆச்சரியப் பட்டு ''நீயா? ஒரு மூட்டை உளுந்தை ஒருவன் இன்னொருவனின் உதவி இல்லாமல் தூக்க முடியாதே. உன்னால் தனியாக ஒரு மூட்டை உளுந்தைத் தூக்கி முதுகில் சுமந்து எடுத்துக் கொண்டு மளிகைக் கடை வரை எப்படிப் போக முடிந்தது?'' என்று ஆச்சரியப்பட்டுக் கேட்டான்.

முருகனும் ''ஆமாம். நான்தான் இப்படி எடுத்துச் சென்றேன்'' எனக் கூறி. ஒரு உளுந்த மூட்டையைப் புரட்டித்தள்ளி நிறுத்தினான். பின்னர் அதனருகே தன் முதுகைத் திருப்பி உட்கார்ந்து மூட்டையின் இருமுனைகளையும் பிடித்து எழுந்து மூட்டையைச் சுமந்து கொண்டு நடந்து காட்டினான்.

அப்போது பரமசிவம் ''முருகா! இவ்வளவு பலமா? இந்த மூட்டையையும் கடைக்குக் கொண்டு போய் விற்று பணத்தை வாங்கிக் கொள்'' என்றான். முருகன் தயங்கித் தயங்கி நின்றான். அப்போது பரமசிவம் ''உண்மையாகத்தான். உன் பலத்தை காட்டியதற்காக இது உனக்குப் பரிசு'' என்றான். முருகனும் மகிழ்ச்சியுடன் அங்கிருந்து சென்றான்.

பரமசிவமும் வேலைப்பனைப்

பார்த்து ''என்ன நடந்தது என்று தெரிந்து கொண்டாயா?'' என்று கேட்டான். வேலப்பனும் சிரித்து கொண்டு ''இப்போது நடந்தது மட்டுமல்ல, நேற்றிரவு இது போல நடந்ததையும் பார்த்து, அதன் காரணத்தையும் தெரிந்து கொண்டேன்'' என்றான். அதைக் கேட்ட பரமசிவம் ''காவலுக்கு இருந்த நீ திருடு நடப்பதைப் பார்த்து விட்டு அதை என்னிடம் ஏன் கூறாமல் இருந்தாய்?'' என்று கேட்டான்.

வேலப்பனும் ''அதற்கான காரணத்தை நான் தெரிந்து கொண்டு விட்டேன் என்று கூறினேனே. நீங்கள் அதை கவனிக்கவில்லையா?'' என்று கேட்டான். பரமசிவமும் ''கவனிக்கவில்லைதான். ஆனால் இவ்வளவு வருடங்களாக என் மகனோடு சேர்ந்து வேலையும் செய்த எனக்குத் தெரியாத காரணம் இங்கு வந்து ஒருநாள் காவலிருந்த உனக்கு மட்டும் எப்படித் தெரிந்தது?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டான்.

வேலப்பனும் ''உங்கள் மகன் செய்தது திருட்டே அல்ல. உங்கள் மகன் உங்களோடு சேர்ந்து உடல் வளைய வயலில் வேலை செய்தானா? இல்லையா?'' என்று கேட்கவே பரமசிவமும் ''ஆமாம். செய்தான். அதற்கு இப்போது என்ன?'' என்று கேட்டான். வேலப்பனும் ''இப்படிக்கடுமையாக உழைத்த உங்கள் மகனுக்குக் கைச் செலவுக்கு என்று ஏதாவது பணம் கொடுத்தீர்களா? இல்லையே. அவனுக்குத் தன் செலவுக்காகப் பணம் வேண்டி இருக்கிறது. அதற்காகத் தன் வீட்டு நிலத்தில் விளைந்ததை எடுத்து விற்று காசாக்கிக் கொண்டான். ஒருவன் தன் சொந்தப் பொருளை எடுத்து விற்பது திருட்டு என்று கூற முடியாதே'' என்றான்.

பரமசிவமும் ''ஆமாம். நீ சொல்வது சரியே. வளர்ந்து விட்ட பிள்ளைக்கு எவ்வளவோ ஆசைகள் மனதில் தோன்றும். அதை அறிந்து தக்கபடி அவன் நிறைவேற்றிக் கொள்ள தந்தை அவ்வப் போது கொஞ்சம் பணம் கொடுத்து வர வேண்டும்'' இவ்வளவு நாட்களாக இது எனக்குத் தெரியவில்லை. நீ இப்போது கூறிய பிறகே எனக்குத் தெரிந்தது. இனி என் மகனை இவ்வாறு செய்யும் நிலைக்குத் தள்ள மாட்டேன்'' என்றான்.



காவேரிக்கரையோரமாய்...1

# தலைக் காவேரி

கருத்து: **மீரா நாயர்** ◆ ஓவியர்: **கௌதம் சென்**




இந்தியாவின் ஏழு புனித நதிகளில் காவேரியும் ஒன்று. இதனை தட்சிண கங்கை என்றும் கூறுகிறார்கள். இதற்குப் பொன்னி என்றும் அகண்ட காவேரி என்றும் அன்ன பூரணி என்றும் பெயர்கள் உண்டு. இந்நதி கர்நாடகத்திலும் தமிழ் நாட்டிலுமாக 765 கிலோ மீட்டர் தூரம் பாய்ந்து கடலில் சேர்கிறது.

காவேரியின் பிறப்பு பற்றி பல கதைகள் உண்டு. ஸ்கந்த புராணப் படி சிவபிரானின் இருப்பிடமான கைலாசத்தில் காவேரி பாய்ந்து கொண்டிருந்ததாம். சிவபிரான் காவேரியை ஒரு கமண்டலத்தில் வைத்து அகத்திய முனிவரிடம் கொடுத்து ''நீ இதை எடுத்துக் கொண்டு தென் பாரதத்திற்குப் போ. வழியில் தாகம் எடுத்தால் உனக்குக் குடிக்க இது உதவும்'' எனக் கூறி அனுப்பினார். அவரும் விந்திய மலையைத் தாண்டி தெற்கே சென்று கொண்டிருந்தார்.

அப்போது தென் பாரதத்தில் வறட்சி ஏற்பட்டது. இதற்குக் காரணம் ஒரு ராட்சஸன் மழை பொழியும் மேகங்களைத் தடுத்து நிறுத்தி விட்டானாம். இந்திரனின் வேண்டுகோளின் படி விநாயகப் பெருமான் காக்கை உருவில் கமண்டல நீரைத் தட்டி விடவே அதிலிருந்த காவேரி வெளியே பாய்ந்து வந்து காவேரி நதியாக ஓடத் தொடங்கியது.

விநாயகர் அகத்தியரின் கமண்டலத்தைத் தட்டி விடுதல்



## குடகில் காவேரி



தலைக்காவேரி கோவில்

கர்நாடகத்தில் குடகு மாவட்டத்திலுள்ள பிரம்மகிரி மலை அடி வாரத்தில்தான் காவேரி உற்பத்தியாகிறது. இதுதான் தலைக் காவேரி.

ஒவ்வொரு ஆண்டிலும் அக்டோபர் 16 - 17ல் துலாசங்கிரமனம் என்ற நாள் வருகிறது. அன்று மலையடி வாரத்திலுள்ள குளத்தில் நீர் ஊற்று ஊறத் தொடங்குகிறது. ஒரு மாத காலத்திற்கு துலாசங் கமம் என்று திருவிழாவாகக் கொண்டாடுகிறார்கள். அந்தக் குளத்தின் பெயர் புஷ்கரணி. நீர் ஊற்று அந்தக் குளத்தை நிரப்புகிறது. இதைக் காண மக்கள் அக்குளக் கரையில் கூடுகிறார்கள். நீர் ஊற்று வர வர மக்கள் அக் குளத்தில் இறங்கிக் குளித்துத் தம்மோடு ஒரு பாத்திரத்தில் குளத்தின் நீரையும் கொஞ்சம் எடுத்துச் செல்கிறார்கள்.

குளத்தில் குளித்தவர்கள் அதன் கரையிலுள்ள சிறு கோவிலில் இருக்கும் காவேரி தேவியை வழிபடுகிறார்கள். அங்கு மலை மீதுள்ள அகத்தியர் கோவிலுக்கும் போய் பூஜை செய்து விட்டுத் திரும்புகிறார்கள்.

காவேரி சங்கம் விழா கொடவர்கள் எனப்படும் குடகு வாசிகளுக்கும் மிகவும் முக்கியமான தாகும். கொடவர்கள் தம் வாழ் நாளில் ஒருமுறையாவது தலைக் காவேரிக் குளத்தில் துலா ஸ்நானம் செய்தாக வேண்டுமென எண்ணுகிறார்கள். பெண் தன் பெயரைக் காவேரி என்றும் ஆண்மகன் தன் பெயரைக் காவேரியப்பா என்றும் வைத்துக் கொண்டு மகிழ்கிறார்கள். பல சமயங்களில் அவர்கள் தம் தங்க நகைகளைக் காவேரி நதியில் போட்டு தன் கணவனான கடலுக்குக் கொண்டு போகட்டும் என்று பக்தி சிரத்தையுடன் எண்ணுகிறார்கள்.

கொடவர்கள் நல்ல உடற்கட்டு கொண்டவர்கள். துணிச்சலும் தைரியமும் கொண்டவர்கள். தம் பழக்க வழக்கங்களை விடாமல் கடைப் பிடிப்பவர்கள். பெண்களான கொடவத்திகள் புடவை அணியும் விதமே அலாதியானது. அது பற்றி ஒரு கதை வழக்கில் உள்ளது.



ஒருமுறை பார்வதி தேவி அரசகுமாரன் தேவகாந்தனின் கனவில் தோன்றி கொடவர்களை எல்லாம் வலம்புரி என்ற இடத்தில் ஒன்று கூட்டச் சொன்னாளாம். அவர்களெல்லோரும் பார்வதி தேவியைக் காண ஆவலுடன் இருந்தார்கள். அப்போது பார்வதி தேவி நதியின் உருவில் வெகு வேகமாய் வரவே அங்கு கூடி இருந்த பெண்கள் கட்டி இருந்த புடவையின் முன் பக்கம் திரும்பிப் பின் பக்கம் போய் விட்டதாம். இன்றும் கொடவத்திகள் அதே விதமாகத்தான் புடவை உடுத்திக் கொள்கிறார்கள்.

தன் பால் பக்தி சிரத்தை காட்டியதால் பார்வதி தேவி மகிழ்ந்து குடகுப் பகுதியைச் செழிப்பாக்கி மூங்கில், தேக்கு சந்தன மரங்கள் கொண்ட காடுகளையும் நெல் வயல்களையும் காப்பித் தோட்டங்களையும் அளித்திருக்கிறாள் போலும்!

குடகு மாவட்டத்தில் பெரிய நகரம் மடிகேரி எனப்படும் மெர்க்காரா. வீர ராஜ பேட் என்னும் ஊர் பழங்காலத் தலைநகராக இருந்த ஊர். இங்கு வெப்ப நிலை மிகவும் தாழ்ந்தே உள்ளது. கோடை காலத்தில் இங்கு மிக அதிக வெப்ப நிலை 30 டிகிரி செல்சியஸ். 5000 மி.மீட்டருக்கு மேல் மழை பெய்யும் மூன்று இடங்கள் இப்பகுதியில் உள்ளன.

ஹலேரி வம்வத்தைச் சேர்ந்த முத்து ராஜா 1681 மடிகேரியில் கோட்டையையும் அரண்மனையையும் கட்டினார். இப்போது அரண்மனை ஒரு அருங்காட்சியகமாக மாற்றப்பட்டுள்ளது. இதில் குடகின் பல பாகங்களிலிருந்து எடுக்கப்பட்ட 'வீர'க் கற்கள் உள்ளன.

பிரம்மகிரி மலையடி வாரத்தில் பாக மண்டல என்ற இடத்தில் காவேரி நதியில் கனகா நதி சேர்வதைக் காணலாம். இங்கு கண்ணுக்குத் தெரியாத சுஜோதி என்ற உப நதியும் காவேரியில் கலப்பதாகக் கருதுகிறார்கள். இது பிரயாகை போன்ற திரிவேணி சங்கமம் என்று கருதப்படுகிறது. கங்கை சுஜோதி வடிவில் வந்து காவேரியில் குளித்து தானடைந்த பாவங்களை தினமும் போக்கிக் கொள்கிறதாம்.

இங்குள்ள சிவன் கோவிலான பாகண்டேஸ்வரர் ஆலயம் மிகவும் புகழ் பெற்றது. இங்கு 1790ல் தொட்ட வீர ராஜேந்திர மன்னனுக்கும் திப்பு சுல்தானுக்கும் போர் மூண்டது. அதனால் இக்கோவில் கூரையின் மூன்று செப்புத் தகடுகள் நாசப்படுத்தப்பட்டன. அவற்றிற்கு பதிலாக வீர ராஜேந்திரன் வெள்ளித் தகடுகளைப் போர்த்திக் கூரையை செப்பனிட்டான். அந்த வெள்ளித் தகடுகளை இன்றும் காணலாம்.


கொடவத்தியின் புடவை சுழன்று செல்வது

பாக மண்டலத்தில் தேன்விற்கும் சந்தை அமைந்துள்ளது. இதற்கு மதுவன என்று பெயர். இங்கு பல விதத் தேனீக்கள் வளர்க்கப்படு கின்றன. இது வாசனை மிகுந்த ஏலக்காய்க்கும் பெயர் பெற்றது.

குடகு மைசூர் எல்லையில் குஷல் நகர் உள்ளது. தனக்கு ஆண் குழந்தை பிறந்த நற் செய்தியை ஹைதர் அலி. இங்கு பெற்றதால் அங்கு இப்பெயரை அவன் இவ்வூருக்கு வைத்தானாம். இந்தக் குஷல் நகருக்கருகே பாயும் காவேரிதான் குடகுக்கும் மைசூருக்கும் இடையே எல்லையாக உள்ளது.

மடிகேரி, மைசூர் பாதையிலுள்ள பெரிய பட்டண என்பது ஒரு காலத்தில் புலிகளின் உறைவிடமாக இருந்தது. இங்கு புலிகள் கண்ட இடத்தில் படுத்துக் கிடந்தனவாம். குடகு வேட்டைக்காரர்கள் இவற்றை விரட்டி இப்பகு தியை மக்கள் வசிக்க ஏற்றதாகச் செய்தார்கள். பெரிய பட்டண வடக்குக் குடகு கிளப் சர் வின்ஸ்ட்ன் சர்ச்சிலைப் போஷகராக் கொண்டதாகப் பெருமைப்பட்டுக் கொள்கிறது. சர்ச்சில் இந்திய ராணு வத்தில் இருந்த போது இங்கு இருந்தாராம்.



காப்பிக் கொட்டை சேகரித்தல்

**குடகு பற்றிய முக்கிய குறிப்புகள்**

- கொடவர்கள் மக்கட் தொகையின் விகிதா சரப்படிப் பார்த்தால் அவர்களுக்கு இந் திய ராணுவத்தில் நிறைய இடங்கள் கிடைத்துள்ளன. பீல்ட்மார்ஷல் கரியப் பாவும், ஜெனரல் திம்மய்யாவும் கொட வர்களே.
- குடகு ஆண்டு தோறும் 14 லட்சம் கிலோ தேன் அளிக்கிறது.
- குடகில் ஆங்கில ஆட்சி ஏற்படு முன் அங்கு சாலைகளும் வண்டிகளும் கிடை யாது. மக்கள் முன்பு நடந்தோ அல்லது குதிரை மீது சவாரி செய்தோ பயணம் செய்தனர். குடகு மன்னர்கள் சாலைகளை அமைக்காத காரணம் எதிரிகள் படை எடுக்க அவை உதவுமே என்ற பயமே. குடகின் முதலாவது சாலையை ஆங் கிலேயர்கள் குஷல் நகரிலிருந்து மடி கேரிக்குப் போட்டார்கள். காவேரி நதி யின் உபநதியான லக்ஷ்மண தீர்த்த நதிக் கரையில் நகரஹளே தேசியப் பூங்கா அமைந்துள்ளது.



ஃபீல்ட் மார்ஷல் கரியப்பா



# முயற்சியால் முடிந்தது!

ஒரு சிறு கிராமத்திலிருந்து சின்னப்பன் தன் படிப்பை முடித்து பதினெட்டு வயதான போது தன் தந்தையை இழந்து விட்டான். அவனுக்கு அவனது தந்தை கொஞ்சம் நிலம் விவசாயம் செய்ய வைத்து விட்டுப் போன போதிலும் அவன் நகருக்குப் போய் ஜமீன்தாரர் கஜபதியிடம் வேலை செய்யவே ஆசைப் பட்டான்.

ஜமீன்தாரர் மிகவும் நல்லவர். தன்னிடம் வேலை செய்பவர்களின் நலனில் மிகுந்த அக்கறை காட்டுபவர். சின்னப்பன் அவரைக் கண்டு தனக்கு வேலை போட்டுக் கொடுக்கும்படி வேண்டவே ஜமீன்தாரரும் தன் அலுவலகத்தில் ஒரு குமாஸ்தா வேலையை அவனுக்குக் கொடுத்தார்.

வேலையை ஏற்றுக் கொண்டு அவன் ஒரு வாரம் கழித்துத் தன் கிராமத்திற்கு வந்தான். அவன் தன் தாயாரிடம் ''அம்மா! எனக்கு நகரத்தில் வேலை கிடைத்து விட்டது. இனி நீ இங்கே இருக்க வேண்டாம். என்னோடு நகருக்கு வந்து விடு. எனக்கும் எங்கே சாப்பிடுவது என்ற பிரச்னை இருக்காது. நீ சமைத்துப் போட நான் சாப்பிடலாம்'' என்றான். அவனது தாயோரோ ''நான் இந்த வீட்டையும் நம் நிலத்தையும் விட்டு விட்டு எங்கும் வரமாட்டேன். வேண்டுமானால் நீ உன் மாமன் மகள் மரகதத்தைக் கல்யாணம் செய்து கொண்டு நகருக்கு அழைத்துக் கொண்டு போ. அவள் உனக்கு சமைத்துப் போடுவாள். உன் சாப்பாட்டுப் பிரச்னை தீர்ந்து விடும். நீயும் அவ்வப்போது இங்கு வந்து என்னைப் பார்த்து விட்டுப் போகலாம்'' என்று கூறி விட்டாள்.

தன் தாயார் நகருக்கு வரமாட்டாள் என்பதைத் தெரிந்து கொண்ட சின்னப்பன் தன் தாயின் யோசனைப் படியே ஒரு வாரத்துள் தன் மாமன் மகள் மரகதத்தை மணந்து கொண்டு

—சுப. சங்கரன்—



அவளை அழைத்துக் கொண்டு நகருக்குச் சென்று குடித்தனம் வைத்தான். அவனுக்குக் கிடைத்த வாடகை வீடும் சிறியதே. ஒரு சமையலறையும் ஒரு அறையும் கொண்ட பகுதி அது. கணவன், மனைவி இருவருக்கும் அது போதுமானதாகவே இருந்தது. ஆனால் அவர்களுக்கு ஒரு குழந்தை பிறந்ததும் அந்த இடம் போதாது என மரகதம் எண்ணினாள்.

அவள் தன் கணவனிடம் ''நமக்கு இந்த இடம் போதவில்லை. இன்னும் சற்றுப் பெரிய இடமுள்ள வீட்டைப் பாருங்கள்'' என்றாள். சின்னப்பனோ ''என் சம்பளத்தில் இதைவிடப் பெரிய இடமாகப் பார்க்க முடியாது. நகரில் வீட்டு வாடகை மிக மிக அதிகம் என்று உனக்குத் தெரியாதா?'' என்று கூறி விட்டான்.

கொஞ்ச நாட்களுக்குப் பின் மரகதம் தன் கணவனிடம் ''எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. நாமே ஒரு வீட்டைக் கட்டிக் கொண்டு அதில் இருந்து கொண்டு குடித்தனம் செய்யலாமே'' என்றாள். சின்னப்பனோ ''வீடு கட்டுவது என்பது விளையாட்டா? இப்போது இந்த வீட்டு வாடகை கொடுத்துக் கொண்டு இருப்பதே சிரமமாக இருக்கிறது. வீடு கட்ட எவ்வளவோ பணம் வேண்டும். செங்கல், மணல், சுண்ணாம்பு, மரம் என்றெல்லாம் இப்போது யானை விலை குதிரை விலை விற்கிறது. கட்டட வேலைக்கு கொத்தன், தச்சன், மேஸ்திரி என்றெல்லாம் தேர்ந்தெடுத்து அவர்கள் சரியாக வேலை செய்கிறார்களா என்றும் பார்க்க வேண்டும், அதனால் நம் மால் வீடெல்லாம் கட்ட முடியாது'' என்றான்.

ஆனால் மரகதம் மனம் தளர்ந்து விடவில்லை. எப்படியாவது ஒரு வீட்டைக்கட்டி விடுவது என்ற ஒரே நோக்கில் சிறுகச் சிறுகப் பணம் சேர்க்கலானாள். இச்சமயத்தில் ஜமீன்தாரர் தம்மிடம் பணிபுரிபவர்களுக்கு நகரில் ஓரிடத்தில் வீட்டு மனைகள் கொடுத்தார். ஒவ்வொருவருக்கும் ஆயிரம் சதுர அடி பரப்புள்ள இடம் கொடுக்கப்பட்டது. சின்னப்பனுக்கும் ஒரு வீட்டு மனை கிடைத்தது.

அப்போது மரகதம் தன் கணவனிடம் ''வீடு கட்ட மனை கிடைத்து விட்டதே. அதில் நாம் வீட்டைக் கட்டலாமே'' என்றாள். சின்னப்பனோ சிரித்து விட்டு ''வீடு கட்டப் பணத்திற்கு எங்கே போவது? நான் யாரிடமும் போய்க் கை நீட்டிக் கடன் வாங்க

மாட்டேன்'' என்றான். மரகதமும் ''நான் நம் வீட்டுச் செலவை சிக்கனப் படுத்திக் கொண்டு கொஞ்சம் பணம் சேர்த்திருக்கிறேன். அதைக் கொண்டு நமக்குக் கிடைத்த வீட்டு மனையில் அஸ்திவாரம் போட்டு சுவர் எழுப்ப முடியும். அதை முதலில் செய்வோம். பிறகு மற்றவற்றிற்கும் ஏதாவது வழி செய்வோம். நமக்கு யாராவது உதவி செய்யாமலா போய் விடுவார்கள்? நம்மால் முடியாது என்று கை கட்டிக் கொண்டு எதுவுமே செய்யாமல் உட்கார்ந்திருக்க வேண்டாமே. முயன்றால் முடியாதது எதுவும் இல்லை'' என்றாள்.



சின்னப்பனோ ''இப்படிப் பேசி விட்டால் எதுவும் நடந்து விடுமா?''' எனவே மரகதமும் ''நான் முயல்கிறேன். வீட்டைக் கட்ட முடியும் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது என்றாள். சின்னப்பனும் ''இதோ பார். என்னால் இது சம்பந்தமாய் எதுவும் செய்ய முடியாது வேண்டுமானால் நீ முயன்று பார்'' எனச்சற்றும் விருப்பம் இல்லாதவன் போலக் கூறினான்.

இதனால் மரகதம் உற்சாகத்தை இழந்து விடவில்லை. மறுநாளே தான் சேர்த்து வைத்த பணத்தைக் கணக்கிட்டுப் பார்த்தாள். வீடு கட்டும் மேஸ்திரியைக் கூப்பிட்டுப் பேசி ஜமீன்தாரர் தன் கணவனுக்குக் கொடுத்த வீட்டு மனையில் அஸ்திவாரம் போட்டு சுவர் எழுப்பச் சொன்னாள். கிராமத்திலுள்ள தன் அண்ணனுக்குத்தான் வீடு கட்டுவது பற்றி எழுதி கதவுகளும் சன்னல்களும் செய்ய நல்ல மரத் துண்டுகளை அனுப்பி வைக்கும்படிக் கேட்டுக் கொண்டாள். அவனும் தன் வயலிலுள்ள மரங்களில் நல்லதாகத் தேர்ந்து எடுத்து அறுத்து மரத் துண்டுகளை நகரிலுள்ள தன் தங்கைக்கு அனுப்பவே, அவற்றைக் கொண்டு சன்னல்களையும் கதவுகளையும் செய்யச் சொல்லி வீட்டில் தக்க இடங்களில் வைத்தாள். இந்நிலையில் வீட்டு சுவர் கூரை உயரத்திற்கு எழுப்பப்பட்டு விட்டது.

இனி கூரையில் குறுக்கும் சட்டங்கள் போட்டு அதன் மீது ஒடுகள் பரப்ப வேண்டியதுதான் பாக்கி. அந்த சமயத்தில் மரகதத்திற்கு உதவ அவளது பள்ளித் தோழி பார்வதி முன் வந்தாள். மரகதம் அவளிடம் தான் வீடு கட்டுவது பற்றிக் கூறி இனி கூரை போடும் வேலைதான் மீதமுள்ளது எனவே

பார்வதியும் ''கவலைப்படாதே எங்கள் தோப்பில் பனை மரங்கள் ஏராள மாக உள்ளன. உனக்கு எவ்வளவு வேண்டுமானாலும் தருகிறேன்'' என்றாள். மரகதமும் தன் தேவையைக் கூறவே பார்வதியும் அவளுக்குத் தேவைப்பட்ட பனம் சட்டங்களை அனுப்பி வைத்தாள். கூரைக்கான சட்டங்களும் சுவர்களின் மீது அடிக் கப்பட்டு விட்டன. அடுத்து ஓடுகளை வாங்கி வந்து கூரை மீது பரப்ப வேண்டியதுதான் பாக்கி. ஓடுகள் வாங்க பணத்திற்கு ஏற்பாடு செய்ய வேண்டும். அதற்கு எவ்வளவு ஆகும் என ஓடுகளை விற்கும் கடையில் விசாரித்தாள். கடைக்காரன் கூறிய தொகையை எங்கிருந்து கொண்டு வருவது என்று யோசித்தவாறே மறு நாள் காலையில் அவள் இருந்த போது ஒரு வண்டி கட்டடத்தின் முன் நின் றது. அதன் பின்னாலேயே சின்னப் பன் சிரித்துக் கொண்டே வந்து கொண் டிருந்தான்.

வந்த ஆட்கள் வண்டியிலிருந்து ஓடுகளை இறக்கி வைத்து விட்டுப் போனார்கள். அதை ஆச்சரியத்தோடு பார்த்துக் கொண்டு நின்ற மரகதத்தி டம் சின்னப்பன் ''நேற்று நீ ஓடுகளின் விலையை விசாரிக்கப் போனதை நான் பார்த்தேன். இவ்வளவு வரை நீ விடா முயற்சியுடன் கட்டடம் கட்டி வந்ததைக் கண்டு நான் மலைத்துப் போனேன். நீ இதற்குப் பணத்திற்கு என்ன செய்வாய் என்று நான் யோசித்துப் பார்த்தேன். எப்படியோ இது வரை சமாளித்து விட்டாய். இந்த ஒரு சின்ன வேலைதான் மீதம் நின் றுள்ளது. இதுவரை கடன் என்று நீ யாரிடமும் போய்க் கேட்கவில்லை. இனியும் நீ போகக் கூடாது என்று எண்ணி என்னிடமிருந்த பணத்தை உடனே கடைக்குப் போய் கொடுத்து ஓடுகள்ள அனுப்புப்படிச் சொல்லி விட்டு வந்தேன். அதனால்தான் ஓடு கள் வந்தன. முயன்றால் முடியாது என்று எதுவும் இல்லை என்று நீ நிரூபித்ததோடு எனக்கும் ஒரு நல்ல படிப்பினையைக் கற்றுக் கொடுத் தாய்?'' என்றான்.

மரகதமும் ''இனிமேல் வாடகை வீட்டில் இருந்து கஷ்டப்பட வேண் டியதில்லை. நமக்கு என்று ஒரு வீடாகி விட்டது'' என்றாள் பெரு மிதத்துடன்.



ஆங்கிலேயர்களை எதிர்த்த வீரர்கள்

⑥

# வேலூர் சிப்பாய்க் கலகம்

கருத்து: **மீரா உத்ரா** ஓவியம்: **ஜி.எஸ்.**



















அதனால்
துரையே! மன்னியுங்கள். எங்கள் தலைப் பாகை...


எம் பொட்டு! எம் குண்டலம்!!
தாடியும் மீசையும் எங்கள் மதச் சின்னம். எங்களுக்கு அவை வேண்டும்.


சீச்சீ


புதிய விதிகள்படி நடக்க சிப்பாய்கள் மறுக்கவே அவர்களில் பத்தொன்பது பேர்கள் விசாரணைக்காக சென்னைக்கு அனுப்பப்பட்டனர்.
ஒழுங்கீனம் சகிக்கப் பட மாட்டாது. இதன் விளைவைக் காட்டுவோம்.


சிப்பாய்களுக்கு சவுக்கடிகள் கொடுக்கப்பட்டன.


வேலூருக்கு செய்தி எட்டியதும்
எங்கள் மதச் சின்னங்களை விட்டு விடுவதா?
இதற்குபதில் அவர்களை ஒழிப்போம்


சிப்பாய்கள் 1806 ஜூலை 10 காலை 3 மணிக்கு தாக்கி னார்கள்.
டுமீல்
ஷ் ஷ் ஷ்


என்ன நடக்கி றது?
டும்
ஷ் ஷ்...
சிப்பாய்கள் சுடுகிறார்கள் தப்புவோம்


கர்னல் ஃபேன் கோர்ட் படுகாயமுற்றான்
ஆ!
அதன் பின் இறந்தான்


கர்னல் மைக்ராசும் சுட்டுக் கொல்லப்பட்டான்
ஆ!


அரண்மனையில் சிறைப்பட்டிருந்த திப்பு சுல்தானின் குடும்பத்தவரை விடுவிக்க சிலர் சென்றனர். கலகக் கொடி உயர்த்தப்பட்டது!
மன்னர் மவுஜீத் தன் வாழ்க!
வாழ்க! வாழ்க!!
















நானூறு கலகக்கார சிப்பாய்கள் உயிரிழந்தார்கள் பலர் காயமுற்றார்கள். திப்புவின் மகனும் அவனது குடும்பத்தவரும் சென்னைக்கு அனுப்பப்பட்டு பிறகு கல்கத்தாவிற்குக் கொண்டு செல்லப்பட்டனர்.




நகுஷன் ஆரம்பத்தில் நல்லவனாகத்தான் இருந்தான். ஆனால் இந்திரப் பதவி கிட்டியதும் கேளிக்கைகளில் மூழ்கி விட்டான். ஒருநாள் இந்திரனின் மனைவியான சசிதேவியைப் பார்த்ததும் அவளை அடைய ஆசை கொண்டான். தான் இந்திரப் பதவியை அடைந்து விட்டதால் இந்திரனின் மனைவியான சசிதேவியும் தனது உடைமை என அவன் எண்ணினான். அதை அவன் சசி தேவியிடம் தெரிவிக்கவே அவள் பயந்து போய் பிரகஸ்பதியிடம் சரண் புகுந்தாள். அதைக் கேள்விப்பட்ட நகுஷன் ரிஷிகளையும் முனிவர்களையும் வாய்க்கு வந்த படித் திட்டினான்.

அவர்களோ அவனிடம் ''நீ பிறர் மனைவியை அடைய விரும்புவது சரியல்ல'' என்று அறிவுரை கூறினார்கள். அவனோ ''இந்திரன் இம்மாதிரி எவ்வளவோ தடவைகளில் செய்திருக்கிறானே. அப்போதெல்லாம் நீங்கள் எங்கே போயிருந்தீர்கள்?'' என்று கேட்டான். அப்போது தேவர்கள் பிரகஸ்பதியிடம் சென்று ''மகாத்மாவே! நகுஷன் மிகவும் கோபத்தோடு இருக்கிறான். அதனால் பெரிய ஆபத்தே ஏற்படும் போலிருக்கிறது. எனவே சசிதேவியை அந்த நகுஷனிடம் அனுப்பி சமாதானப்படுத்தச் சொல்லுங்கள்'' என்றனர். ஆனால் சசிதேவியோ ''நானொன்றும் அந்த நகுஷனை பார்க்க போக மாட்டேன். உங்களிடம் சரண் புகுந்த என்னை நீங்கள்தாம் காக்க வேண்டும்'' எனக் கதறிக் கண்ணீர் விட்டாள்.

தேவர்களும் சசிதேவியின் பரிதாப நிலை கண்டு பிரம்ம தேவனிடம் ''நகுஷனின் அட்டகாசங்கள் அதிகரித்துக் கொண்டே போகின்றன. இப்போது அவன் சசி தேவியை அடைய விரும்புகிறான், இந்த அநியாயத்தை உங்களால்தான் தடுத்து நிறுத்த முடியும். இதற்கு ஏதாவது



ஒரு வழி செய்யுங்கள்'' என்று வேண்டினார்கள்.

பிரகஸ்பதியும் சசி தேவியிடம் ''கவலைப்படாதே. இதற்கு நான் ஒரு வழி சொல்கிறேன். நீ நகுஷனை இங்கு வரச் சொல். அதுவும் பல்லக்கை ரிஷிகள் சுமக்க அதில் அவன் அமர்ந்து வர வேண்டுமென்று தெரிவி. பல்லக்கில் அமர்ந்த அவன் முனிவர்கள் கோபப்படும்படி ஏதாவது செய்வான். அதனால் முனிவர்கள் கோபமடைந்து அவனுக்கு சாபம் கொடுப்பார்கள். அதனால் அவனது தொல்லையும் நீங்கும்'' என்றார்.

சசி தேவியும் பிரகஸ்பதி கூறிய படியே நகுஷனுக்குச் செய்தி அனுப்பினான். அவனும் ரிஷிகளைப் பல்லக்கைத் தூக்கச் சொல்லி அதில் அமர்ந்து கொண்டான். ரிஷிகள் பல்லக்கைச் சுமந்து கொண்டு மெதுவாகச் செல்லவே, நகுஷன் கோபம் கொண்டு வேகமாகப் போ என்று பொருள் தரும் 'சர்ப்ப', 'சர்ப்ப' என்று உரக்கக் கூறி அதட்டினான். அதனால் கோபம் கொண்ட அகத்திய முனிவர் ''நீ சர்ப்பமாக அதாவது பாம்பாகப் போகக் கடவது'' என்று சாபம் கொடுத்தார். அடுத்த நொடியிலேயே நகுஷன் பாம்பாகி விட்டான். நகுஷனின் தொல்லை ஒழிந்ததால், முன்பு அவனிடம் பயம் கொண்டு ஓடி ஒளிந்த இந்திரன் திரும்பி வந்து தன் பதவியில் அமர்ந்தான்.

சல்லியன் இந்த விவரத்தை தருமரிடம் கூறி ''ஒரு சிலருக்குப் பதவி கிடைத்து விட்டால் தலைகால் புரியாமல் கூத்தாடுவார்கள். அப்போது அவர்களுக்கு நல்லது எது கெட்டது எது என்று கூட அறியும் சக்தி இல்லாதும் போய் விடும். அதனால் எதையெல்லாமோ செய்து தம் தலையிலேயே மண்ணைப் போட்டுக் கொள்வார்கள். இந்த நிலையில்தான் இப்போது துரியோதனன் துள்ளிக் கொண்டிருக்கிறான். துள்ளின மாடு பொதி சுமக்கும். துரியோதனனின் ஆட்டத்தைப் பற்றிக் கவலைப் படாதீர்கள்'' என்று கூறி அவரையும் மற்ற பாண்டவர்களையும் வாழ்த்தி விட்டு துரியோதனனைக் காணச் சென்றான்.

துருபதன் திருதராஷ்டிரனிடம் பாண்டவர்களின் தூதராக தன் புரோகிதரை ஹஸ்தினாபுரத்திற்கு அனுப்பினான். அவர் அந்நகரைப் போய் அடைவதற்குள் பாண்டவர்களும் கௌரவர்களும் படைகளைத் திரட்டி

வைத்துக் கொள்ளலாயினர். பாண்ட வர்கள் தரப்பில் போர் புரிய ஏழு அக்ஷெளணிசேனை உபப்லவத்திற்கு வந்து சேர்ந்தது.

மகாரதனான யுயுதானன் ஒரு அக்ஷெளணி சேனையைக் கொண்டு வந்தான். சேதி நாட்டு மன்னன் திருஷ்டகேதுவும் அதே அளவுப் படையைக் கொண்டு வந்தான். பாண்டிய நாட்டு மன்னன் மலை வாழ் மக்களில் வீரர்களைச் சேர்த்துக் கொண்டு வந்தான். துருபதன் பெருத்த படையுடனும் மகாரதர்களான தன் புதல்வர்களுடன் வந்து சேர்ந்தான். மத்சிய நாட்டு மன்னன் விராடன் மலை வாழ் வீரர்களைத் தன்னோடு அழைத்து வந்தான். இன்னும் சில மன்னர்களும் கௌரவர்களை எதிர்த்துப் போராடத் தம் படைகளோடு வந்து சேர்ந்தார்கள்.



இதே சமயத்தில் துரியோதனனின் பக்கம் நின்று பாண்டவர்களை எதிர்த்துப் போராட பதினோறு அக்ஷெணி சேனை திரட்டப்பட்டது. நரகாசுரனின் மகனான பகதத்தன் ஒரு அக்ஷெளனி படையுடன் வந்து சேர்ந்தான். இதுபோல பூரிஸ்ரவனும் சல்லியனும் ஒவ்வொரு அக்ஷெளணி படையைக் கொண்டு வந்தார்கள். கிருதவர்மன் யானை போல பலமுள்ள வீரர்களைக் கொண்டு வந்தான். சிந்து, செளவீர நாட்டு மன்னர்கள் துரியோதனனிடம் தம் படைகளைக் கொண்டு வந்தனர். அவை ஒரு அக்ஷெளணியாகும். மாகிஷ்மதி புரத்திலிருந்து நீலன் பயங்கர ஆயுதங்கள் கொண்ட வீரர்களோடு வந்தான். அவந்தி மன்னன் இரண்டு அக்ஷெளணி சேனையுடன் வந்தான். கேகய மன்னனும் ஒரு அக்ஷெளணி படையுடன் வந்தான். மற்ற மன்னர்கள் கொண்டு வந்தப் படைகளின் மொத்தம் மூன்று அக்ஷெளணிகளாகும்.

துரியோதனன் பக்கம் நின்று போராட வந்த மன்னர்களுக்கு ஹஸ்தினாபுரத்தில் தங்கி இருக்க இடம் இருக்கவில்லை. அவர்களுக்கே இடம் இல்லாத போது அவர்களது படைகளுக்கு மட்டும் இடம் இருக்குமா என்ன? அவை ஐந்து நதிகளின் கரைகளில் குரு ஜாங்கூலத் திலும் ரோஹிதாரண்யத்திலும், அஹிச்சக்கரத்திலும், காலகராடத்திலும்கங்கை யமுனைக் கரைகளிலும், வாரணம், வாடதானத்திலுமுள்ள பரந்த மைதான வெளிகளிலும் முகாமிட்டன.



இவ்வாறு முகாமிட்டிருந்த படை
களைப் பார்த்தவாறே துருபதனின்
தூதராகச்சென்ற புரோகிதர்ஹஸ்தினா
புரத்தை அடைந்தார். அவர் ராஜ தர்
பாரைஅடையவே அவரைமரியாதை
யுடன் பீஷ்மரும், விதுரரும், திருத
ராஷ்டிரனும் வரவேற்றார்கள். அவர்
கள் பாண்டவர்களின் நலம் பற்றிக்
கேட்கவே அவரும் அதற்குத் தக்க
பதிலைக் கூறி விட்டு, பாண்டவர்
களும் ஹஸ்தினாபுரத்திலுள்ள
வர்களைப் பற்றி மிகவும் விசாரித்த
தாகக் கூறி விட்டு. அவையிலிருந்த
யாவரையும் பார்த்து இவ்வாறு
கூறினார்.

சபையோர்களே! திருதராஷ்டிர
னும் பாண்டுவும் ஒரு தந்தைக்குப்
பிறந்த புதல்வர்களே. எனவே இவர்
களிருவருக்கும் முன்னோர் வைத்து
விட்டுப்போனசொத்து சரிபாதியாகக்
கிடைக்க வேண்டும். திருதராஷ்டிர
னின்புதல்வர்கள்தம்சொத்தைஅனுப
வித்துக் கொண்டிருக்கிறார்கள்.
ஆனால் பாண்டுவின் புதல்வர்களோ
அப்படி இருக்கமுடியவில்லை. இதற்
குக் காரணம் என்ன? துரியோதனன்
அவர்களுக்குப்பல தொல்லைகளைக்
கொடுத்து அந்த சொத்தை அவர்கள்
அனுபவிக்க முடியாமல் செய்ததை
நீங்கள்அறிவீர்கள். அவர்களின்ஆயுள்
பலம் கெட்டியாக இருந்ததால் அவர்
கள் இப்போதும் உயிர் பிழைத்து
இருக்கிறார்கள். அவர்கள் தாமாக
சம்பாதித்த நாட்டைக் கூட வஞ்சக
மாய் சூதாட்டத்தில் ஆடி துரியோத
னன் பறித்துக் கொண்டான். பாண்ட
வர்கள் பதிமூன்று ஆண்டுகள் வன
வாசம் செய்து பல கஷ்டங்களை
அனுபவித்தார்கள். விராட நகரில்
அவர்கள் எப்படி இருந்தார்கள் என்
பதை உங்களுக்கு நான்கூற வேண்டிய
தில்லை இவ்வளவு நடந்தும் பாண்ட
வர்கள்கௌரவர்களுடன்சமாதானம்
செய்து கொள்ளவே விரும்புகிறார்
கள். அவர்கள் கௌரவர்களுடன்
போர் புரிய விரும்பவில்லை.
போரால்வீணாக மக்கள்மடிவார்கள்.
எனவே அமைதியான முறையில்
பேச்சு வார்த்தைகளை நடத்தி தம்
நாட்டைப் பெற வேண்டுமென்றே
பாண்டவர்கள் விரும்புகிறார்கள்.
துரியோதனன் தானே பலமிக்கவன்
என்றும் பாண்டவர்களின் பலம்
குறைந்தது என எண்ணி விட வேண்
டாம். பீமனின் பலம் யாவருக்கும்
தெரிந்ததே. அர்ஜுனனின்முன்போர்
களத்தில் யாராலும் நிற்க முடியாது.

பாண்டவர்களுக்கும் பலமன்னர்கள் படைகளைக் கொடுத்து உதவ வந்திருக்கிறார்கள். எல்லாவற்றிற்கும் மேலாக கிருஷ்ணர் அவர்களின் பக்கத்தில் இருக்கிறார். இப்படி பலம் பெற்றவர்களுடன் அறிவுள்ள எவனும் மோதத் துணிய மாட்டான். எனவே இந்த அரிய வாய்ப்பை நழுவ விடாமல் துரியோதனன் பாண்டவர்களுடன் சமாதானமாகப் போக வேண்டும்.

துருபதனின் புரோகிதர் இவ்வாறு கூறி முடித்ததும் பீஷ்மர் அவரைப் பார்த்து ''அந்தணரே! நீங்கள் கூறியது உண்மையே. பாண்டவர்கள் போருக்குத் தயார் நிலையில் இருப்பதும் சமாதானப் பேச்சு நடத்த முயல்வதும் சரிதான். பீமனும் சரி, அர்ஜுனனும் சரி, போர்க்களத்தில் எவரையும் வெல்லக் கூடியவர்களே, இதில் சந்தேகமில்லை'' என்றார்.



பீஷ்மர் இவ்வாறு கூறியதுமே கர்ணன் துள்ளி எழுந்து ''அந்தணரே! தருமர் நிபந்தனைக்குக் கட்டுப்பட்டு சதுரங்கம் ஆடி அதில் தோற்று நாட்டை இழந்து வனவாசம் செய்தார். தோற்ற பொருள்களை திருப்பிக் கொடுக்கும் படிக் கேட்பது அறிவற்ற செயல். நான் இருக்கும் போது அர்ஜுனனால் கௌரவர்களை வென்று விட முடியுமா? பாண்டவர்களுக்கு நாடும் கிடையாது, சமாதானமும் கிடையாது. போர்தான் என்று கூறும்'' என்று கர்ஜித்தான். பீஷ்மர் அவன் மீது எரிந்து விழுந்து ''கர்ணா! வீண் ஜம்பம் கொள்ளாதே. உன் மனதில் நீ மாபெரும் வீரன் என்ற எண்ணமா? உன் திறமை என்ன என்பதுதான் எங்களுக்கு எல்லாம் அன்று தெரிந்து போய் விட்டதே. உன்னால் அர்ஜுனனை என்ன செய்ய முடிந்தது என்பதை எல்லோரும் விராட நகரப் போரில் பார்த்தார்களே!'' என்று குத்தலாகக் கூறி அவனை அடக்கினார்.

அப்போது திருதராஷ்டிரனும் கர்ணனைக் கடிந்து கொண்டும், பீஷ்மரைக் புகழ்ந்தும், துருபதனின் தூதராக வந்த புரோகிதரிடம் ''ஐயா! நான் நன்கு யோசித்து என் பதிலை பாண்டவர்களுக்கு சஞ்சயன் வாயிலாகத் தெரிவிக்கிறேன். தாங்கள் திரும்பிப் சென்று பாண்டவர்களிடம் இதைத் தெரிவியுங்கள்'' என்றான். அவரை மரியாதைகளுடன் அனுப்பி விட்டு அவன் சஞ்சயனிடம் ''சஞ்சயா! நீ உபப்லவம் போய் பாண்டவர்களிட



மும் மற்றுமுள்ள அரசர்களிடம் நான் அவர்களது நலன் பற்றி விசாரித்ததாகக்கூறு. பாண்டவர்களுக்கு நாம் தாம் தொல்லைகளைக் கொடுத்தோம். ஆனால் அவர்களோ நமக்கு ஒரு கெடுதலையும் செய்யவில்லை. தருமன் கோபம் கொண்டு போர் புரிய வந்தால் அதன் விளைவு எப்படி இருக்கும் என்று நினைத்தாலே பயமாக இருக்கிறது. அவர்களிடம் நல்ல விதமாகப் பேசி போர் மூளாமலிருக்க வழி செய்'' என்றான்.

சஞ்சயனும் அவ்விதமே செய்வதாகக் கூறி உபப்லவத்திற்குப் போய்ச் சேர்ந்தான். அங்கு தருமரையும் மற்ற அரசர்களையும் கண்டு அவர்களைப் பற்றி திருதராஷ்டிரன் மிகவும் விசாரித்ததாகக் கூறி விட்டு எல்லோரும் கேட்கும்படி இவ்வாறு கூறினான்.

''திருதராஷ்டிரர் சமாதானத்தை விரும்பியே என்னை இங்கு அனுப்பியுள்ளார். பாண்டவர்கள் அமைதியை விரும்புபவர்கள். அதனால்தான் உலகம் அவர்களைப் போற்றுகிறது. எனவே அவர்களுடன் போர் என்ற பேச்சிற்கே இடமில்லை. உறவினர்களையும் மக்களையும் போர் என்ற பெயரில் கொல்வதால் என்ன பயன்? பாண்டவர்களும் கௌரவர்களும் சமமான பலம் கொண்டவர்கள். இருவரும் போர் புரிந்தால் யாருக்கு வெற்றி என்று கூறுவது கடினம். போரால் எவ்விதப் பயனும் ஏற்படாத போது அதைத் துவக்குவானேன்? எனவே சமாதானமாய் பேசி ஒரு முடிவுக்கு வரும்படி உங்களை நான் கேட்டுக் கொள்கிறேன்''

இவ்வாறு சஞ்சயன் கூறியதும் தருமர் ''சஞ்சயா! நான் போரை விரும்புவனல்ல. அமைதியையே விரும்புபவன். தர்ம நியாயப்படி நடப்பவன். மோசம் செய்து சூதாட்டம் ஆடிய அன்றே கௌரவர்களுக்கு அழிவுக் காலம் ஆரம்பமாகி விட்டது. கௌரவர்களுடன் சமாதானமாகப் போகவே நான் விரும்புகிறேன். இதற்கு முன் அவர்கள் எங்களுக்குச் செய்த துரோகங்களை எல்லாம் நான் மறந்து விடுகிறேன். எனக்கு இந்திரப்பிரஸ்தத்தை மட்டும் துரியோதனன் கொடுத்தாலே போதும். மீதமுள்ளதை அவனே ஆண்டு வரட்டும்'' என்றார்.

சஞ்சயனும் ''தருமரே! நீங்கள் என்றும் தர்ம நியாயம் தவறி நடந்தவரல்ல. அற்ப நாடாசை கொண்டு கெட்ட பெயரை அடைய நீங்கள்

முயல மாட்டீர்கள். போர்புரிய வேண்டாம். கௌரவர்கள் உங்களுக்கு நாட்டைக் கொடுக்க மாட்டார்கள். எனவே நீங்கள் போர் புரியாமல் இருக்க வேண்டும்'' என்றான்.

தருமரோ சஞ்சயன் இவ்வாறு கூறியதை ஏற்காமல் தர்ம நியாயம் என்பது அநியாயத்தைச் சகித்துக் கொள்வது அல்ல என்றும் அநியாயத்தை ஒழிக்கச் செயல்படுவதும் நியாயமே எனவும் கூறினார். கிருஷ்ணரும் ''சஞ்சயா! நீ என்னவோ அமைதி சமாதானம் என்றெல்லாம் கூறுகிறாய். ஆனால் அநியாயம் நடக்கையில் அதைப் பார்த்துக் கொண்டு ஒரு க்ஷத்திரியன் பேசாமல் இருக்க வேண்டும் என்கிறாயே. திருதராஷ்டிரனின் புதல்வர்கள் நியாயமற்ற வழியில் பாண்டவர்களின் நாட்டைப் பறித்துக் கொண்டார்கள். பிறரது சொத்தை அனுபவிப்பது முறையா? அதை உரியவரிடம் ஒப்படைக்கத் தானே வேண்டும்? அப்படிச் செய்யாவிட்டால் அதன் உரிமையாளர் அதனை எவ்விதத்திலாவது அடைவதே நியாயம். எனவே பாண்டவர்களின் நாட்டைக் கௌரவர்கள் கொடுத்து விட வேண்டும். அப்படி அவர்கள் செய்யாவிட்டால் போர் தான் ஒரே வழி'' என்றார்.

அது கேட்டு சஞ்சயன் ''சரி, இதை நான் திருதராஷ்டினிடம் கூறுகிறேன். இங்கு என் பேச்சிலோ அல்லது செயலிலோ ஏதாவது தவறு இருந்தால் அதற்காக என்னை மன்னித்து விடுங்கள். நான் யாவரிடமும் விடை பெற்றுக் கொள்கிறேன்'' எனக் கூறி அங்கிருந்து ஹஸ்தினாபுரத்திற்குத் திரும்பிச் செல்லலானான்.

அப்போது தருமர் ''சஞ்சயா! உண்மையில் நாங்கள் சமாதானத்தையே விரும்புகிறோம். எனவே நாட்டின் ஒரு பகுதியை எங்களுக்குக் கொடுத்து விடும்படி துரியோதனனிடம் கூறு. இதனால் போரும் மூளாது. எல்லோரும் சுகமாக இருக்கலாம். இதை விளக்கி அவனிடம் கூறு. அவன் சமாதானத்திற்கு ஒப்பா விட்டால் நாங்கள் போருக்கும் தயார் என்பதையும் தெரிவி'' என்றார்.

சஞ்சயனும் திருதராஷ்டிரனிடம் தருமர் கூறியதை அப்படியே கூறுவதாகச் சொல்லி விட்டு ஹஸ்தினாபுரத் திற்குக் கிளம்பிச் சென்றான்.



# அம்புலிமாமா செய்திகள்

**வேகத்தில் சாதனை:**

ஜப்பானில் டிசம்பர் 6ல் வண்டியோட்டி இல்லாமல் ஒரு ரயில் மணிக்கு 531 கி.மீ. வேகத்தில் ஓட்டிக் காட்டப்பட்டது. மிக ஒல்லியாய் அழகாய்த் தென்படும் 'மாக்லெவ்' என்ற இந்த ரயில் டோகியோவினருகே யாமநாஷியில் 18.5 கி.மீ. ரயில் பாதையில் ஓடி இந்த சாதனை புரிந்தது. இதற்கு முந்தைய உலக



சாதனை வேகம் 517 கி.மீ. ஆனால் இதே மாக்லெவ் யாமா நாஷியில் டிசம்பர் 24ல் மணிக்கு 550 கி.மீ. வேகத்தில் ஓடி புதிய சாதனை ஏற்படுத்தியுள்ளது.

**சிறையில் நீண்ட காலம் வாசம்:**

பயங்கரக் குற்றங்கள் புரியவர்களுக்கு பொதுவாக மரண தண்டனையோ அல்லது ஆயுள் தண்டனையோ விதிக்கப்படும். ஆயுள் தண்டனை என்பது ஒரு கைதி தன் வாழ்நாள் முழுவதும் சிறையில் இருக்க வேண்டும் என்பதல்ல. பொதுவாக இது எல்லா நாடுகளிலும் 21 ஆண்டு காலம் என நிர்ணயிக்கப்பட்டு உள்ளது. இந்த தண்டனைக் காலத்தில் கைதி மனம் மாறி நல் நடத்தையுடன் இருந்தால் சிறை வாச நாட்கள் குறைக்கப்பட்டு தண்டனைக் காலம் முடியுமுன்பே விடுதலை செய்யப்பட்டு விடுவான். தென் ஆப்பிரிக்காவைச் சேர்ந்த மோசஸ் நீடால் 38 கொலைகளையும் 40 கற்பழிப்புகளையும் 6 திருட்டுகளையும் செய்தவன் என்று நிரூபிக்கப்பட்டதால் சென்ற டிசம்பரில் நீதிமன்றம் மொத்தம் 2410 ஆண்டுகள் சிறை தண்டனை விதித்தது. முப்பத்து மூன்றான மோசஸ் 25 - 30 வயதானவர்களைத் தான் துன்புறுத்தி இருக்கிறான். இவனுடைய தண்டனைக் காலம் குறைக்கப்படுமா அல்லது இவன் சிறையிலேயே என்றென்றும் இருப்பானா என்பதை நாம் அறிய காத்திருக்கத்தான் வேண்டும்.

**துருக்கி 'தூங்கிய நேரம்'!**

மக்கள் தொகை கணக்கு எல்லா நாடுகளிலும் பத்து ஆண்டுகளுக்கு ஒருமுறை நடத்தப்படுகிறது. பத்தாவது ஆண்டின் முதலாவது நாள் முதல் இந்தக் கணக்கெடுப்பு ஆரம்பமாகிறது. அரசாங்க அதிகாரிகள் வீடு வீடாகப் போய் குடும்பத் தலைவர்களிடம் விவரங்கள் கேட்டுக் குறித்துக் கொள்கிறார்கள். முதல் முறை அவர்கள் ஒரு வீட்டிற்குப் போகும் போது குடும்பத் தலைவர் வீட்டில் இல்லாவிட்டால் மீண்டும் மீண்டும் செல்கிறார்கள். ஓராண்டு காலம் தொடர்ந்து இவ்வாறு நடந்து விவரங்கள் அரசாங்கத்திற்குக் கொடுக்கப்படுகின்றன. துருக்கி ஒரே நாளில் மக்கள் தொகை எண்ணி விடுவது என்று தீர்மானித்தது. நவம்பர் 30ல் மின்னல் வேகத்தில் மக்கள் தொகை கணக்கெடுக்கப்பட்டது. அது ஒரு ஞாயிற்றுகிழமை. அன்று யார் வீட்டிலோ, மருத்துவமனையிலோ, விடுதியிலோ இருந்தாலும் காலை 5 மணியிலிருந்து 14 மணி நேரத்திற்கு இருக்கும் இடத்தை விட்டு வெளியே வரக்கூடாது என அரசாங்கம் அறிவித்து அந்த உத்தரவை மீறி வெளியே வந்தால் ஆறு மாத சிறை தண்டனை அளிக்கப்படும் எனத் தெரிவித்தது. மக்கள் தொகை கணக்கெடுப்போரையும் போலீஸ்காரர்களையும் தவிர வேறு யாரும் வீதிகளில் அந்த நேரத்தில் நடமாடவில்லை. இவ்வாறு துருக்கி ஒருநாளை 'தூங்கும் நாளக' ஆக்கிவிட்டது.



நம் நாட்டுக்
கண்கவர் காட்சிகள்

# பஞ்சரா பிரிவினர்

ஒளரங்கஜீப்பின் படையெடுப்பால் பஞ்ஜரா பிரிவு மக்கள் ராஜஸ்தானத்திலிருந்து தெற்கு நோக்கிச் சென்றனர். இவர்கள் இரண்டாயிர ஆண்டுகள் வரலாறு படைத்தவர்கள். ஐரோப்பாக் கண்டத்திலிருந்து ரோமன் ஜிப்ஸிகள் சிலர் ஆப்கனில் தானம் வழியாக இந்தியாவிற்கு வந்து சேர்ந்தார்கள். இவர்கள் ராஜஸ்தானத்தில் குடி புகுந்தார்கள். முகலாயர்களிடம் இவர்கள் ஆயுதங்களைச் சுமந்தும், கூடார சாமான்களைத் தூக்கியும் வேலை செய்து வந்தார்கள். சிலர் ஆங்கிலேயர்களின் ஒற்றர்களாகப் பணி புரிந்தார்கள். பிறகு இவர்கள் திப்புசுல்தானிடம் வேலைக்கு அமர்ந்தார்கள்.



பஞ்ஜராக்கள் ஓரிடத்தில் நிலைத்திராமல் அலைந்து திரிந்து வாழ்க்கை நடத்த விரும்புபவர்கள். ஏதாவது வேலையைத் தேடி அலைபவர்கள் மண்குடங்கள் தட்டுகள், கூடைகள், பாய்கள் என்பனவே இவர்களது சொத்து, இவர்கள் ஒன்றாக இருந்து தமக்கு ஒரு தலைவனைத் தேர்ந்தெடுத்துக் கொள்கிறார்கள்.

இந்துக்களின் சில ஆசாரங்களைக் கடைப் பிடிக்கும் இவர்களுக்கு பண்டிகைகள் மிகவும் பிடிக்கும். பஞ்ஜாரா பெண்கள் ஆடிப்பாடி அச்சமயங்களில் மகிழ்கிறார்கள். பூக்கள் போட்ட வண்ணத் துணிகளை இவர்கள் அணிகிறார்கள். இவர்களது ஆடைகள் தலையிலிருந்து கால் வரை தொங்கும். ரவிக்கைகளில் கண்ணாடித் துண்டுகளை வைத்து தைத்திருப்பார்கள். முழங்கை வரை கண்ணாடி, பித்தளை, வெள்ளி, தந்தம், தங்கம் ஆகியவற்றாலான வளையல்களை அணிந்து கொள்கிறார்கள். ஆண்கள் வேட்டி, சட்டை, தலைப்பாகை அணிந்து சாதாரணக் குடியானவர்கள் போலத் தென்படுகிறார்கள்.

புராணகால மன்னர்கள் :

# மயூரத்துவஜன்

துவாபரயுகத்தில் மணிப்புரம் என்ற நாட்டை மயூரத்துவஜன் என்ற அரசன் ஆண்டு வந்தான். நேர்மையானவன், மக்கள் நலன் காப்பவன் என்று பெயர் பெற்றவன். அவன் ஒரு யாகம் செய்ய எண்ணி யாகக் குதிரையைப் பல நாடுகளுக்குப் போய் வர அனுப்பினான். அக்குதிரையின் பின்னால் வெற்றி யாத்திரையின் போது அவனது மகன் சுசித்திரன் சென்றான்.

இதே சமயம் பாண்டவ மன்னரான தருமரும் அசுவமேத யாகம் செய்ய எண்ணியாகக் குதிரையைப் பல நாடுகளில் திரிந்து வர அனுப்பினார். அதன் பின்னால் அர்ஜுனனும் கிருஷ்ணனும் சென்றார்கள். சுசித்திரன் அர்ஜுனனையும் கிருஷ்ணரையும் நினைவிழந்து கிடக்கச் செய்து விட்டு அவர்களைக் கடந்து சென்றான்.

சற்று நேரம் கழித்து நினைவுக்கு வந்த கிருஷ்ணரும் அர்ஜுனனும் தம்மை அந்நிலையில் விட்டுச் சென்று வீரனின் தந்தை எவ்வாறு இருக்கிறான் என்று காண எண்ணி அந்தணர்கள் போல வேடம் பூண்டு மணிப்புரத்திற்குச் சென்று மயூரத்துவஜனைக் கண்டார்கள். அவனும் அவர்களை வரவேற்று அவர்கள் விரும்புவது யாது என்று கேட்டான்.

அந்தணர் வேஷத்திலிருந்த கிருஷ்ணர் ''காட்டு வழியே வரும் போது ஒரு சிங்கம் என் மகனைப் பிடித்துக் கொண்டது. நான் அதனிடம் நீ என்னைக் கொன்று தின்று உன் பசியைப் போக்கிக் கொள். ஆனால் என் மகனை மட்டும் விட்டு விடு'' என்று கெஞ்சினேன். சிங்கமோ ''நான் உன்னைக் கொல்ல மாட்டேன். மயூரத்து வஜ மன்னனின் உடலில் ஒரு பாதியைக் கொண்டு வந்து கொடுத்தால் உன் மகனை விட்டு விடுவேன்'' என்றது. அதனால்தான் தங்களிடம் வந்தேன் என்றார்.

அதைக் கேட்ட மயூரத்துவஜனின் மனைவி ''ஒரு கணவனின் மனைவியை அர்த்தாங்கி என்கிறார்கள். எனவே என் கணவரின் பாதி உடலுக்கு பதிலாக என்னை சிங்கத்திடம் கொண்டு போய் விடுங்கள்' என்றாள். கிருஷ்ணரோ ''மனைவி கணவனின் இடது பாகம். சிங்கம் கேட்பதோ மன்னனின் வலது புறப்பாதியை'' என்றார்.

மயூரத்துவஜனும் ''ஆகா! என் உடலின் வலது பகுதியை அறுத்து எடுத்துக் கொண்டு போய் சிங்கத்திற்குக் கொடுங்கள்'' என்றான். கிருஷ்ணர் அந்த மன்னனின் உடலை அறுக்கப் போன போது அவனது இடது கண்ணிலிருந்து கண்ணீர் வடிந்தது. அதைக் கண்ட கிருஷ்ணர் ''இப்படி அழுது கொண்டே கொடுக்கும் தானம் எனக்கு வேண்டாம். தானம் முழு மனதுடன் கொடுக்க வேண்டும்'' என்றார்.

அப்போது மயூரத்துவஜன் ''ஐயா! என் உடலின் வலது பாகம் ஒரு நற்காரியத்தைக் செய்கிறதே. தனக்கு அந்தப் பாக்கியம் கிடைக்கவில்லையே என்றுதான் என் உடலின் இடது பாகம் கண்ணீர் வடிக்கிறது'' என்றான்.

மறு விநாடியே கிருஷ்ணர் உண்மை வடிவில் தோன்றி அம்மன்னனைக் கட்டித்தழுவி பாராட்டி அந்த யாகம் முடியும் வரை அவர் இருந்து விட்டுப் பிறகு அவனை தருமர் யாகம் புரியும் இடத்திற்கு அழைத்துச் சென்றார்.



## உங்களுக்கு தெரியுமா?

### யூனிகார்ன்

யூனிகார்ன் என்பது பழங்காலக் கற்பனைப் பிராணி. ஆனால் வெகு காலம் வரை அப்படி ஒரு பிராணி இருந்ததாகக் கருதி வந்தார்கள். பிரிட்டிஷ் அரசாங்கச் சின்னத்தில் கேடயத்தின் ஒருபுறம் சிங்கத்தின் உருவமும் அதன் எதிர்புறத்தில் யூனி,காரனின் உருவமும் பொறிக்கப்பட்டுள்ளது. யூனிகார்ன் தலை மீது ஒரு கொம்புள்ள விசித்திரப் பிராணியாகக் காட்டப்பட்டுள்ளது. முதலாவது



எலிசபெத் ராணியிடம் யூனிகார்னின் கொம்பு இருந்ததாயும் அது மிகயும் விலையுயர்ந்தது என்றும் அது மனிதர்களுக்கு விஷக்கடி ஏற்பட்டால் அதைப் போக்கும் சக்தி இருந்தது என்றும் கருதப்பட்டது. புராணப்படி சிங்கம் யூனிகார்னின் கடும் விரோதி. அதனால்தான் கேடயத்தில் எதிரும் புதிராக இலை பொறிக்கப்பட்டன.

## வானவில்

### கண்ணாடி சன்னல்

கண்ணாடி சன்னல்கள் கண்ணாடியையும் ஈயத்தையும் பயன்படுத்தித் தயாரிக்கப்படுகின்றன. இச்சன்னலின் படத்தை முதலில் வரைந்து அதில் கண்ணாடி, ஈயம், வண்ணம் முதலியன எப்படியெல்லாம் இருக்க வேண்டுமென்று குறிப்பிடுகிறார்கள். மத்திய நூற்றாண்டுகளில் கலைஞர்கள் கண்ணாடிகளைத் தாமே தயாரித்து வந்தனர். ஆனால் இப்போது இவை தேவைப்படும் அளவுகளிலும் நிறங்களிலும் கிடைக்கின்றன. படத்தின் படி கண்ணாடிகளை அறுத்து ஈயத்தை ஒட்ட வைத்து அவற்றைப் பொருத்துகிறார்கள். கண்ணாடிச் சட்டம் தயாரானதும் அதன் மீதும் சித்திர வேலைப்பாடுகள் செய்யப்படுகின்றன. அக்காலத்தில் இச்சன்னல்களில் பல சம்பவங்களை வரைந்து வைத்தனர்.



# வருமுன் காப்பவள்!

மதுரையில் மெய்யப்பன் ஒரு சாதாரண குடும்பத்தவன். அவனது மனைவி இரு குழந்தைகள் அக்குடும்பத்தின் மற்ற உறுப்பினர்கள். அவன் தன் தங்கை மீனாட்சியை புதுக்குடி கிராமத்து புண்ணியகோடிக்கு மணம் செய்து அவ்வூருக்கு அனுப்பி விட்டான். புண்ணியகோடியும் பணக்காரனல்ல.

சில வருடங்களுக்குப் பின் புண்ணிய கோடிக்கு இதய நோய் கண்டது. அப்போது மெய்யப்பனின் மனைவி தன் கணவன் பேச்சையும் மீறி புண்ணிய கோடியையும் மீனாட்சியையும் மதுரைக்கு அழைத்து வந்து தக்க வைத்தியரிடம் காட்டி மருந்து வாங்கிக் கொடுத்தாள். அவர்களை அவள் ஒரு மாத காலம் மதுரையிலையே இருக்க வைத்து அக்கறையுடன் கவனித்துக் கொண்டாள். வைத்தியர் இனி இதய நோய் புண்ணிய கோடிக்கு வராது என்று கூறிய பிறகே அவள் மீனாட்சியையும் புண்ணிய கோடியையும் புதுக்குடிக்கு அனுப்பினாள்.

அப்போது மெய்யப்பன் தன் மனைவியிடம் ''நான் கூட என் தங்கையையும் அவளது கணவனையும் அக்கறையாக கவனிக்கவில்லையே உனக்கு என்ன கரிசனம்?'' என்று கேட்டான். அதற்கு அவனது மனைவி ''புண்ணிய கோடிக்கு வந்தது இதய நோய், திடீரென மாரடைப்பால் அவன் இறந்து விட்டால் உங்கள் தங்கை விதவையாகித் தன் குழந்தை களுடன் நம் வீட்டிற்குத் தானே வந்து உட்கார்ந்து விடுவாள். அப்போது நமக்குத் தானே சிரமம்? அப்படி நடந்து விடக்கூடாது என்றே முன்னெச்சரிக்கையாக இப்படிச்செய்தேன்'' என்றாள்.



சுதந்திரத்தின் பொன்விழா ஆண்டில் அம்புலிமாமாவின் காணிக்கை

# முதலாவது சுதந்திரப் போர்



(கான்புர் கலகத்திற்குப் பின் நானாசாகப் மராட்டிய மன்னனாக முடி சூட்டப் பட்டது கிழக்கிந்தியக் கம்பெனியின் பெருமையைக் குலைப்பதாக இருந்தது. ஜெனரல் ஹென்லாக்தலைமையில் ஆயிரக்கணக்கான ஆங்கில வீரர் படை வீரர்கள் கான்புரைத் தாக்கினார்கள். சற்று எதிர்த்துப் போராடிய நானாசாகப் தன்னால் அப் பெரிய படையை எதிர்க்க முடியாது எனக் கண்டு அங்கிருந்து, தப்பி ஓடினான். ஆயினும் நாடெங்கிலும் ஆங்கிலேயரை எதிர்த்துக் கலகங்கள் மூண்டன அப்போது-)

ஆங்கிலப் படை முகாம் ஒன்றில் களியாட்டம் நிகழ்ந்து கொண்டிருந்தது. அது வரை தோல்விகளையே கண்ட ஆங்கிலேயர்கள் 1858ம் ஆண்டு தமக்கு நல்லதாக அமைந்து வருகிறது என சந்தோஷப் பட்டார்கள். அந்த இராணுவ முகாமிற்கு ஹ்யுரோஜ் என்ற அனுபவமிக்க ராணுவத்தளபதி வந்தான். அவன் இந்திய வரலாற்றை நன்கு அறிந்தவன்.

அவன் ஒரு மண்டபத்தில் உலாவிய படியே அங்கிருந்த இந்திய சிப்பாய்களிடம் ''ஜான்ஸி ராணி லக்ஷ்மி பாய் தானே படைக்குத் தலைமை தாங்கி அதை நடத்தி செல்லக் கூடியவள் என்று நீங்கள் நம்புகிறீர்களா? இந்த மாதிரியான ஒரு பெண்ணை இது வரை நான் பார்த்ததே இல்லை'' என்றான்.

அதற்கு ஒரு சிப்பாய் ''ஆமாம்.




ஜான்ஸிராணி மிகவும் துணிச்சல் கொண்டவள். இதில் சந்தேகமே இல்லை'' என்றான்.

சர்ஹ்யுரோஜ் சிரித்தவாறே ''ஓ! மிகவும் துணிச்சலானா ராணியா? உரத்த குரலில் அவள் கத்தி விட்டால் நீங்களெல்லாம் அவளைத் துணிச்சல் காரி என்று தலைக்கு மேல் தூக்கி வைத்துக் கொண்டாடுகிறீர்களே! போர்க்களத்தில் இறங்கிப் போர் புரிவது என்பது சாமானிய விஷயமல்ல. நம்பீரங்கிகளுக்கு முன் இவள் நிற்கத் தான்முடியுமா? ஒரேகுண்டு போதுமே இவளையும் இவளது படையையும் அழிக்க'' என்றான்.

மற்றொரு சிப்பாயோ ''ஐயா! நாங்கள் உங்கள் கீழ் பணிபுரிபவர்களே. ஆனாலும் ஜான்ஸி ராணியைப் பற்றிக் கூறியதெல்லாம் நூற்றுக்கு நூறு உண்மையே. பீரங்கி குண்டால் யாரை வேண்டுமானாலும் தாக்கிக் கொன்று விடலாம். ஆனால் பீரங்கியால் எதிரி சுடும் வரை ஜான்ஸி ராணி பார்த்துக் கொண்டே நிற்பாரா? நீங்கள் பீரங்கியைப் பயன்படுத்தினால் அவரும் பீரங்கியைப் பயன்படுத்துவாரே'' என்றான்.

ஹ்யுரோஜோ ''அவளிடத்தில் எவ்வளவு பீரங்கிகள் இருக்கும்?'' எனவே அச்சிப்பாயும் ''எவ்வளவு என்று எங்களுக்குத் தெரியாது. போரில் பயன்படுத்தும் ஆயுதங்களை எல்லாம் கண்காட்சியில் வைப்பது போலவா வைத்துக் காட்டுவார்கள்? ஆனால் அவை யாவும் அரண்மனையை அடுத்து கிழக்கு திசையிலுள்ள மண்டபத்திலுள்ள சுரங்கத்தில்தான் பீரங்கிகள் துப்பாக்கிகள் குண்டுகள் எனச் சேகரித்து வைக்கப்பட்டுள்ளன. இது எனக்குத் தெரியும்'' என்றான்.

ஹ்யு ரோஜ் ஒரு வரை படத்தை எடுத்து அதை அச்சிப்பாயிடம் காட்டி ''இந்த இடத்தில் தானே குண்டுகள் சேகரித்து வைக்கப்பட்டுள்ளன?'' என்று ஓரிடத்தைச் சுட்டிக் காட்டினான். அங்குள்ள சிப்பாய்கள் ஒருவர் முகத்தை மற்றவர் பார்க்கலானார்கள். ஒருவேளை அரண்மனை ரகசியத்தைத் தாம் வெளிப்படுத்தி விட்டோமோ என எண்ணி அவர்கள் வருந்தினார்கள்.

அப்போது ஹ்யுரோஜ் ''நீங்கள் உங்கள் எஜமானர்களுக்கு துரோகம் நினையாமல் விசுவாசமுள்ளவர்களாய்த்தானே நடந்து கொள்வீர்கள்? உங்கள் எஜமானர்கள் உங்கள் தாய் தந்தையருக்குச்சமமானவர்கள். இதை

நீங்கள் மறக்கக்கூடாது. கிழக்கிந்தியக் கம்பெனிதான் உங்கள் எஜமானர். உங்களுக்கு வாழ்வு அளித்துள்ளது. எனவே நீங்கள் நன்றி மறந்தவர்களாக இருக்கக் கூடாது. நீங்கள் எங்களுக்கு துரோகம் நினைக்காமல் உழைத்தால் உங்களுக்கு நல்ல சன்மானமும் கிடைக்கும்'' என்றான். அடுத்து அவர்களுக்குத் தங்க நாணயங்களையும் வினியோகித்தான்.

ஜான்ஸி ராணி தன் அரண்மனையின் படைத்தலைவர்களையும் நகரப் பிரமுகர்களையும் ஒன்று கூட்டி ''சகோதரர்களே! பெரியோர்களே! வணக்கம். நாம் கிழக்கிந்தியக் கம்பெனியின் ஒரு பண்டகச் சாலையை அழித்து விட்டதால் ஆங்கிலேயர்களை அடியோடு அழித்து விட்டோமென எண்ணி விடாதீர்கள். கடல் கடந்து வந்துள்ள அவர்கள் தமக்கு ஏற்பட்ட ஓரிரு தோல்விகளைக்கண்டு பயந்து ஓடி விட மாட்டார்கள். நாம் நம் ரத்தத்தைச் சிந்தி அவர்களைக் கதறக் கதற அடித்து விரட்டினாலொழிய அவர்கள் நம் நாட்டை விட்டுப் போக மாட்டார்கள். ஆங்கிலப் படைகள் ஜான்ஸியை நோக்கி வந்து கொண்டிருக்கின்றன என்று இப்போதுதான் செய்தி கிடைத்தது. இப்போது நாம் என்ன செய்ய வேண்டும் என்பதை முடிவு செய்யுங்கள். உங்களது முடிவை நான் ஏற்கிறேன்'' என்று கம்பீரமாகக் கூறினாள்.

சபையில் இருந்தவர்களில் யாருமே வாய் திறக்கவில்லை. சற்று நேரத்திற்கு அமைதி நிலவியது. சில நிமிடங்களுக்குப் பின் அரச குடும்பத்தில் பிறந்த முதியவர் ஒருவர் எழுந்து



''அம்மா! இங்கே நாங்கள் வந்தது உங்களுக்கு யோசனை கூறுவதற்காக அல்ல. உங்களது கட்டளையைக் கேட்டு அதன்படி நடக்கத்தான்'' என்றார்.

ராணி லக்ஷ்மிபாயும் ''நீங்கள் யாவரும் இந்த மண்ணில் பிறந்த மாபெரும் வீரர்கள். தாய் நாட்டைக் காக்க நீங்கள் உங்கள் ரத்தத்தை சிந்தச் சற்றும் தயங்க மாட்டீர்கள் என்பது யாவரும் அறிந்ததே. இதில் எனக்கு எவ்வித ஐயப்பாடும் இல்லை'' என்றாள். அனைவரும் ''தாயே! நீங்கள் சொல்வது முற்றிலும் உண்மையே. நீங்கள் கட்டளை இடுங்கள். அதன்படி நாங்கள் நடக்கிறோம்'' என்றார்கள்.

லக்ஷ்மிபாயும் ''நம் தாய் நாட்டிற்கு ஏற்படும் அவமானத்தைச் சகிக்க மாட்டோம். தாய் நாட்டிற்காக உயிரையும்



சென்றார்கள். அன்று பகல் முழுவதும் கடும் போர் நிகழ்ந்தது. ஆங்கிலேய ரின் படைகள் கலகலத்துப் போயின ''ஜான்ஸி ராணி வாழ்க'' என்ற கோஷம் வானைப் பிளந்தது.

மாலையனது. ராணி கோட்டை மதிலிருந்து அரண்மனையை அடைந் தாள். தன் தத்துப்புத்திரன் படுத்திருக் கும் தொட்டிலை அடைந்து மங்கிய விளக்கொளியில் அந்த குழந்தையைப் பார்த்துக் கொண்டே நின்றாள். சற்று நேரத்திற்குப் பின் போரில் காய மடைந்து சிகிச்சை முகாமிற்குக் கொண்டு வரப்பட்ட வீரர்களைக் காண அவள் சென்றாள். அவள் காய முற்ற குதிரைகளைக் கூடப் பார்த் தாள். அன்றிரவு முழுவதும் அவள் தூங்கவே இல்லை.

மறுநாள் காலை மீண்டும் போர் தொடங்கியது. ஆங்கிலேயர்கள் போரில் துப்பாக்கிகளையும் பீரங்கி களையும் பயன்படுத்தலானார்கள். ஜான்ஸிப் படைகளும் பீரங்கிகளை யும் பயன்படுத்தலானார்கள். ஜான் ஸிப் படைகளும் பீரங்கிகளையும் துப்பாக்கிகளையும் பயன்படுத்தி நூற்றுக் கணக்கான ஆங்கிலேயப் படை வீரர்களைக் கொன்றன. மாலை யாகி இருட்டும் வரை போர் நடந்தது.

திடீரென ஜான்ஸி அரண்மனையி லிருந்து நள்ளிரவில் பெருத்த வெடி சத்தத்துடன் ஆகாயத்தில் தீயொளி தென்பட்டது. சர்ஹ்யு ரோஜின் முக் கிய படைத் தளபதியை ஒரு பீரங்கி குண்டு தாக்கி அவனைக் கொன்றது. ''ஆ! ராணியே பீரங்கி குண்டைச் செலுத்தினாளே'' என்று கூறியவாறே தான் அந்தப் படைத் தலைவன்

கொடுக்கத் தயாராகத்தானே இருக் கிறீர்கள்?'' என்று கேட்டாள். யாவ ரும் ''ஆகா! அவ்வாறு செய்வதை எங் களது மாபெரும் பாக்கியமாகக் கருதுகிறோம்'' என்றார்கள்.

ஜான்ஸி மக்களுக்கு ஆங்கிலேய ரின் படையெடுப்பைக் காண வெகு நாட்கள் பிடிக்கவில்லை. ஆங்கிலேய ரின் படைகள் ஜான்ஸியினருகே வந்து விட்டன. ஜான்ஸிப் படைகளும் கோட்டைக்கு வெளியே வந்து கூடா ரங்கள் போட்டுக் கொண்டு எதிரியை எதிர்க்கத் தயாராக இருந்தன.

ராணி கோட்டை மேல் தளத்தின் மீது நின்று தன் வீரர்களுக்கு உற்சாக மளித்துக் கொண்டிருந்தாள். கோட் டையை நோக்கி வந்து கொண்டிருந்த ஆங்கிலேயரின் படை வீரர்களை எதிர்க்க ஜான்ஸி வீரர்கள் முன்

விழுந்து இறந்தான்.

இது கண்டு ஹ்யுரோஜ் திகைத்துப் போனான். மறுநாள் காலை ஜான்ஸி படைகள் இரு பிரிவுகளாகப் பிரிந்து ஒரு பிரிவு கோட்டைக்கு வெளியே எதிரிகளை எதிர்த்தது. மற்ற பிரிவு கோட்டையிலுள்ள அரண்மனைக்குக் கிழக்கே காவலாக நின்றது. இதை ஹ்யுரோஜோ அல்லது அவனது படைத் தளபதிகளோ கவனிக்க வில்லை.

திடீரென பூகம்பமே ஏற்பட்டது போன்ற சத்தம் கேட்டது. அரண் மனையின் கிழக்கேயுள்ள மண்டபம் வெடிக்க அங்கு ஒரே தீப் பிழம்பு எழும்பியது. ஆங்கிலப் படை பீரங் கிப்பிரயோகம் செய்து அங்கு ஜான்ஸி ராணி சேகரித்து வைத்திருந்ததுப் பாக்கி குண்டுகளையும் பீரங்கி குண்டு களையும் அழித்து விட்டது. அங்கு காவலுக்கு இருந்த வீரர்களில் பலர் இறந்து போயினர்.

ஜான்ஸி படை வீரர்கள் கோட் டைக்கு வெளியே பயங்கரமாகப் போராடிக்கொண்டிருந்தார்கள். கோட் டைக்குள் அரண்மனையில் ஒரே துக்கமே இருந்தது. அப்போது நானா சாகிபின் படைத் தலைவன் தாந்தியா தோபி படைகளோடு ஜான்ஸியை அணுகிக் கொண்டிருக்கிறான் என்ற நற்செய்தி ராணிக்குக் கிடைத்தது. அதனால் ஜான்ஸிப் படையினருக்குப் புதிய உற்சாகம் பிறந்தது. ஆங்கிலே யர்களை இனிப் புற முதுகு காட்டி ஓடவைத்து விடலாமென்ற புது நம் பிக்கை கொண்டு எழுந்தார்கள்.

ஆங்கிலப் படை மெதுவாக ஜான்ஸி அரண்மனையை நோக்கி முன்னேறி வந்து கொண்டிருந்தது. ஆனால் அரண்மனைக்குள் நுழைய முடியவில்லை. ஏனெனில் அதை ஜான்ஸிப் படை வீரர்கள் சுற்றி நின்று பாதுகாத்துக் கொண்டிருந்தார்கள். ஆங்கிலப் படை ஏணிகளை வைத்து கோட்டைக்குள் நுழைந்தன. இம் முயற்சியில் ஆங்கிலேயர்கள் தம் நான்கு படைத் தளபதிகளை இழந் தனர். இதற்குக் காரணம் கோட்டை மதில் மீதிருந்து ஜான்ஸி படை துப் பாக்கிகளாலும் பீரங்கிகளாலும் சுட்டதேயாகும்.

ஆங்கிலப் படையின் ஒரு பகுதி பின் வாங்கிச் செல்ல வேண்டியதா யிற்று. **(தொடரும்)**





# பேசும் பழம்

ஒரு மன்னனிடம் ஏராளமான பசுக்கள் இருந்தன. மாடு மேய்ப்பவர்கள் தினமும் அவற்றை மலைச்சாரலுக்குக் கொண்டு போய் மேய விட்டுத் திரும்ப ஓட்டி வருவது வழக்கம். ஆனால் திரும்பி வருகையில் ஒரு பசு குறைவாக இருக்கலாயிற்று. என்ன தான் காவல் போட்டாலும் தினமும் ஒரு மாடு எப்படிக் காணாமல் போகிறது என்பதை மன்னனால் கண்டு பிடிக்க முடியவில்லை.

காணாமல் போன பசுக்களைத் தேடிக் கண்டு பிடிக்கும்படி மன்னன் தன் மூன்று மகன்களை அனுப்பினான். அவர்களும் மலையை அடுத்துள்ள காட்டிற்குள் போய்த் தேடலானார்கள். அப்போது அவர்களைச் சந்தித்த அவலட்சணமான பெண் அவர்களிடம் ''எங்கேயப்பா போகிறீர்கள்?'' என்று கேட்டாள். அவர்களோ முகத்தைச் சுளித்துக் கொண்டு ''நாங்கள் எங்கே போனால் உனக்கென்ன? பேசாமல் உன் வழியைப் பார்த்துக் கொண்டு போ'' என்று எரிந்து விழுந்தார்கள்.

அந்தப் பெண் ஏதோ முனகிக் கொண்டே அங்கிருந்து சென்று விட்டாள். அரசகுமாரர்களும் அங்கிருந்து போய் இருட்டும் போது ஒரு கோட்டையை அடைந்தார்கள். கோட்டைக்குள் தம் பசுக்கள் கட்டப்பட்டிருப்பதை அவர்கள் கண்டார்கள். அவர்கள் கோட்டைக்குள் போகவே ஓரிடத்தில் ஒரு கிழ ராட்சஸி படுத்துத் தூங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்தார்கள்.

அவர்கள் வந்த சத்தம் கேட்டு அந்த ராட்சஸி தூக்கம் கலைந்து எழுந்தாள். அப்போது அவர்கள் தந்திரமாக ''பாட்டி! எங்களுக்கு ஏதாவது வேலை கொடு நாங்கள் இங்கே இருந்து விடுகிறோம்'' என்றார்கள். இந்த ராட்சஸிக்கு அவர்கள் பசுக்களைத் தேடித்தான் வந்திருக்கிறார்களென்பது தெரிந்து விட்டது.

—எஸ். சங்கரராம்—

அவளோ மந்திர தந்திரங்களில் கை தேர்ந்தவள். அவளது உடலில் சக்தி குறைந்து விட்டதால் தன் மாய வேலைகளால் தன் எதிரிகளைப் பிடித்துக் கொன்று வந்தாள். எனவே அந்த அரசகுமாரர்களையும் அவள் அவ்வாறே கொல்ல நினைத்து ''சரி. இப்போது பால் கறக்கும் வேளை. இப்போது போய் பால் கறந்து கொண்டு வாருங்கள். நாளைக்கு உங்களுக்கு மாடுகளை கவனித்துக் கொள்ளும் வேலையைக் கொடுக்கிறேன்'' என்றாள்.

அரசகுமாரர்களும் ஒரு பெரிய பாத்திரம் நிறையப் பால் கறந்து கொண்டு வந்தார்கள். கிழ ராட்சஸியும் ''நீங்கள் மிகவும் பசியாக இருப்பீர்கள். முதலில் பாலைச் சாப்பிடுங்கள்'' என்று கூறி மூன்று பாத்திரங்களில் பாலை ஊற்றி அதில் விஷத்தைக்கலந்து அவர்களுக்குக் கொடுத்தாள். அரசகுமாரர்களும் உண்மை அறியாமல் அவள் கொடுத்த பாலைக் குடித்து விட்டு இறந்து போனார்கள். ராட்சஸி அவர்களது உடல்களை ஒரு பெட்டியில் போட்டு மூடி வைத்தாள்.

மன்னன் தன் புதல்வர்கள் திரும்பி வராதது கண்டு கவலைப்படலானான். அப்போது அவளது மாடுகளை மேய்ப்பவர்களில் இளைஞனான கோபாலன் என்பவன் தான் போய் அரசகுமாரர்களையும் காணாமல் போன பசுக்களையும் தேடிக் கண்டு பிடிப்பதாகக் கூறவே மன்னனும் அவனை அதைச் செய்ய அனுமதித்தான்.

கோபாலனும் அரசகுமாரர்கள் சென்ற காட்டிற்குள் சென்றான். அவன்




முன்பும் அவலசட்சணப் பெண் வந்து ''எங்கேயப்பா போகிறாய்?'' என்று கேட்டாள். அவனும் தான் போகும் வேலை பற்றிக் கூறினான். அப்போது அவள் ''இன்னமும் கொஞ்ச தூரம் போனால் நீ ஒரு கோட்டையைக் காண்பாய். அதில் ஒரு மாய ஜாலக் கிழ ராட்சஸி இருக்கிறாள். என் தங்கையின் உதவியால்தான் அவள் உன் மன்னனின் பசுக்களை மாயமாய் ஓட்டிச் சென்றாள். தன் வேலை முடிந்ததும் அந்த ராட்சஸி என் தங்கையைக் கொன்று விட்டாள். உன் மன்னனின் புதல்வர்களைக் கூட அவள் கொன்றிருக்கலாம். அவர்கள் இவ் வழியே போன போது அவர்களுக்கு விஷயத்தை சொல்ல முயன்றேன். ஆனால் அவர்கள் நான் சொல்வதைக் கேட்க விரும்பாமல் போய் விட்டார்




கள்'' என்றாள்.

கோபாலனும் ''அந்த ராட்சஸி ஏன் அப்படிச் செய்தாள்?'' என்று கேட்கவே அவளும் ''என் தங்கையும் மந்திர தந்திரங்கள் தெரிந்தவள். ராட்சஸி கிழவியாகி விட்டதால் என் தங்கையைச் சிநேகம் செய்து கொண்டு அவளது உதவியுடன் மாடுகளைக் கடத்தி வந்தாள். அவளது வேலை முடியவே என் தங்கையைக் கொன்று விட்டாள். அதனால் அவளைப் பழிக்குப் பழி வாங்கத் துடிக்கிறேன்'' என்றாள்.

கோபாலனும் ''அதற்கு வழி சொல்கிறாயா? என்று கேட்கவே அவளும் ''என்னிடம் மந்திர சக்தியுள்ள ஒரு பழமும் மூன்று கற்களும் உள்ளன. இந்த பழம் உன் உயிருக்கு ஆபத்து வருவதை முன் கூட்டியே சொல்லி விடும். உன் தேவையைப் பூர்த்தி செய்த பின் இதன் விதையை எடுத்து நீரில் நசுக்கிக்கரைத்து இறந்து போனவரின் உடல் மீது அந்த நீரைத் தெளித்தால் அவர் உயிர் பெற்று விடுவார். இந்த கல்லைக் கீழே போட்டு என்ன நடக்க வேண்டுமென்று நீ சொன்னால் அது போல நடக்கும்'' எனக் கூறி பழத்தையும் கற்களையும் அவனிடம் கொடுத்தாள்.

கோபாலன் அவற்றை வாங்கிக் கொண்டு கிழ ராட்சஸியின் கோட்டைக்குள் சென்றான். அங்கு அவன் கிழ ராட்சஸியைக்கண்டு தனக்கு ஏதாவது வேலை கொடுக்கும் படிக் கூறினான். அவன் கூடப் பசுக்களைத் தேடியே வந்திருக்க வேண்டுமென எண்ணிய அந்த ராட்சஸி ''சரி. என் மாடுகளை கவனிக்கும் வேலையை உனக்குக் கொடுக்கிறேன்'' எனக் கூறி ஒரு பாத்திரத்தில் விஷம் கலந்த பாலைக் கொடுத்தாள்.

அப்போது கோபாலனிடமிருந்த பழம் மெல்லிய குரலில் ''பாலைக் குடிக்காதே அதில் விஷம் கலந்து உள்ளது'' என்று எச்சரித்தது. அதனால் கோபாலன் ராட்சஸியின் கண்களுக்குத் தெரியாமல் பாலை ஓரிடத்தில் கொட்டி விட்டான்.

அதன் பிறகு அவள் அவனை ஒரு படுக்கையில் படுக்கச் சொன்னாள். அப்போது கோபாலனிடமிருந்த பழம் ''அதில் படுக்காதே. அதன் கீழே பயங்கரமான பள்ளம் உள்ளது'' என்று எச்சரித்தது. ராட்சஸி போனபின் அவன் அப்படுக்கையைத் தூக்கிப் பார்த்த போது கீழே முட்கள் நிறைந்த ஆழமான பள்ளம் இருப்பதைக் கண்

டான். இரண்டாவது முறையிலும் தான் உயிர் தப்பியதற்கு கோபாலன் மிகவும் மகிழ்ந்தான்.

கோபாலன் அக்கோட்டையில் அரசகுமாரர்கள் எங்கே இருக்கிறார்களென்று தேடிப் பார்க்கலானான். அவன் கண்ணில் அரசகுமாரர்களின் உடல்களுள்ள பெட்டி தென்பட்டது. அவன் அப்பழத்தின் விதையை எடுத்து நீரில் போட்டு நசுக்கிக் கரைத்து அந்த நீரை அரசகுமாரர்களின் உடல்களின் மீது தெளித்தான். மறு நிமிடமே மூவரும் உயிர் பெற்று எழுந்து வந்தனர். அவர்கள் கோபாலனை அடையாளம் கண்டு கொண்டார்கள்.

இதற்குள் ராட்சஸிக்கு ஏதோ சந்தேகம் தோன்றவே அவள் எழுந்து மாட்டுக் கொட்டிலுக்குப் போய்ப் பார்த்தாள். அங்குதான் கடத்தி வந்த மன்னனின் பசுக்கள் இல்லாதது கண்டு கத்திக் கொண்டு கோட்டைக்கு வெளியே ஓடி வந்தாள்.

கோபாலன் பசுக்களுடனும் அரச குமாரர்களுடனும் போவதைக்கண்டு அவர்களைப் பிடிக்க வேக வேகமாக அவள் ஓடினாள். அது கண்டு கோபாலன் ஒரு கல்லை எறிந்து அவளைச் சுற்றிலும் முள்வேலி இருக்க வேண்டுமென நினைத்தான். மறுநிமிடமே அந்த ராட்சஸியைச் சுற்றி முள்வேலி அமைந்து விட்டது. அவள் சிரமப் பட்டு அதைத் தாண்டி ஓடி வந்தாள். கோபாலன் மற்றொரு கல்லை எறியவே அவள் பெரும் நெருப்பினுள் அகப்பட்டுக் கொண்டாள். அது அணையும் வரை அவளால் எதுவும் செய்யமுடியவில்லை.

இதற்குள் கோபாலனும் அரசகுமாரர்களும் பசுக்களுடன் வெகு தூரம் சென்று விட்டார்கள். அப்போதும் ராட்சஸி தங்களைப் பின் தொடர்வது கண்டு கோபாலன் மூன்றாவது கல்லை விட்டெறிந்தான். அது ஒரு பெரிய குளத்தை உண்டாக்கி ராட்சஸியை நீரில் மூழ்கடித்தது.

அதன்பின் கோபாலன் அரசகுமாரர்களுடனும் பசுக்களுடனும் அரண்மனைக்குப் போய்ச் சேர்ந்தான். அங்கு அவன் மன்னனிடம் நடந்ததை எல்லாம் விவரமாகக் கூறினான். மன்னன் கோபாலனை வெகுவாகப் பாராட்டி ஏராளமான பரிசுகளை அளித்தான்.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1998 ஜூலை மாத இதழில் வெளியிடப்படும்.



V. Peppin Mary



A. Krishnaveni

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ மே 25-ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி', சென்னை-600 026.**

## ஜனவரி மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : **தனிமையில் இருப்பதும் ஒரு கம்பீரம்.**

இரண்டாவது போட்டோ : **அணிவகுத்து நிற்பதும் ஒரு சிங்காரம்.**

பரிசு பெற்றவர் : **திரு. டி.கே. சுப்பிரமணியன், மதுரை-5.**




Printed by B.V. REDDI at Prasad Process Pvivate Ltd., Chandamama Building, Chennai- 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, 188, N.S.K.Salai, Vadapalani, Chennai- 600 026 (India) Editor : NAGI REDDI.

AMBULIMAMA (Tamil) May 1998 Regd. No. M. 4863/97
Registrar of News Papers, India. RN 1095/57